

# சொல்லின் செல்வன்

பேராசிரியர்
டாக்டர். ரா. சீனிவாசன்
எம்.ஏ; எம்.லிட்; பி.எச்டி

# முன்னுரை

கம்பன் கவிதையைப் போல் பிற கற்றோர்க்கு இதயம் களியாது. அனுமன் சொல்லின் செல்வன் என்பது கம்பர் அமைத்த பாத்திரப் படைப்பு. இராமன், "யார்கொல் இச் சொல்லின் செல்வன்" என்று இலக்குவனைக் கேட்கிறான்.

கிட்கிந்தை காண்டமும், சுந்தர காண்டமும் இப்பாத்திரப் படைப்பை மிக அழகாக எடுத்துக் காட்டுகின்றன. இராமனை அனுமன் சந்திப்பதும். சீதையின் பால் இராமன் அனுமனைத் தூது அனுப்புவதும், அனுமன் கடல் கடந்து இலங்கையைக் காண்பதும், சீதையைக் கண்டு செய்தி பெற்றுத் திரும்புவதும், மீண்டும் இராமனைச் சந்தித்துச் செய்தி சொல்லுவதும் ஒரு தனி நாடகத்திற்கு வேண்டிய அமைப்புகளாக விளங்குகின்றன. இவையே இந்நூலின் இழைகள்.

இலககிய நாடகங்கள் என்ற முறையில், பாஞ்சாலி சபதம் பாரதியார் கவிதை நாடகமாகத் தந்துள்ளார். அதே போலக் கவிதை நாடகம் இயற்றும் ஆற்றல் இல்லை யாயினும் கவிதை மொழியில் சிறந்த சொல் வளமும் இலக்கியச் சிறப்பும் பொருந்தும் வகையில் நாடகத்தை யாத்துள்ளேன்; கம்பனின் காவியம் எனக்கு முதல் நூல். இதில் உள்ள பெருமை அனைத்தும் கம்பரைச் சார்ந்தது. பாத்திரங்கள் அறிமுகம் தேவையில்லை. அடுத்த இரண்டு நாடகங்களுக்கும் முன்னுரைகள் அங்கங்கே தரப்பட்டுள்ளன.

அணிந்துரை நல்கி அருளிய என் பேராசிரியர் டாக்டர் மு.வ. அவர்களுக்கு மிக்க நன்றியுடையேன்.

ரா. சீனிவாசன்.

# அணிந்துரை

'சொல்லின் செல்வன்' என்ற நாடக நூலைப் படித்து மகிழ்ந்தேன். முதல் நாடகத்தில் கம்பரின் அனுமன் முதலிய மாந்தர்களும், மூன்றாம் நாடகத்தில் கைகேயி முதலான கம்பரின் காவிய மாந்தர்களும் அமைந்திருக்கிறார்கள். இரண்டாம் நாடகத்தில் அவ்வை, அதிகமான், கபிலர் முதலான சங்க இலக்கிய மாந்தர் களைக் காண்கிறோம். 'சொல்லின் செல்வன்,' 'வாய்ச் சொற் கள்,' 'கேகயன் மகள்' என்ற நாடகப் பெயர்கள் ஏற்புடையன. நாடகங்களில் உரையாடல் காவியங்களின் கருத்துகளையும் தொடர்களையும் புறநானூற்று மொழி களையும் அடிப்படையாகக் கொண்டுள்ளன. 'கேகயன் மகள்' என்ற நாடகத்தில் கைகேயியைப் புதிய நோக்கில் காண்கிறோம். ஆயினும் அங்கும் கம்பரின் கற்பனையையும் தனிச்சிறப்புடைய தொடர்களையும் காண்கிறோம்.

இவற்றில் சில கல்லூரி மாணவர்கள் நடித்துக் காட்டியவை. படித்து மகிழ்வதற்கும் ஏற்றனவாக அமைந்திருப்பது போற்றத் தக்கது. நடை எளிமையும் தெளிவும் சுவையூட்டும் திறனும் பெற்று விளங்குதல் மகிழத்தக்கது.

இவற்றைப் படைத்து நல்கிய தமிழ்ப் பேராசிரியர் திரு. ரா. சீனிவாசன், சொல்லின் செல்வன் என்ற இந் நூலின் வாயிலாக நல்லதொரு தொண்டு ஆற்றியுள்ளார். தமிழகம் இந்த நன்முயற்சியை வர வேற்பதாக.

**மு. வரதராசன்**

முதற் பதிப்பு மார்ச்சு, 1968
இரண்டாம் பதிப்பு : மே, 1973
மூன்றாம் பதிப்பு : மே, 1974
நான்காம் பதிப்பு : ஆகஸ்ட், 1974
ஐந்தாம் பதிப்பு : டிசம்பர், 1995

**விலை ரூ 25/-**

வெளியீடு:

**அணியகம்**

5, செல்லம்மாள் தெரு,
சென்னை-600 030.
தொலைபேசி: 61 12 30

V.P.P.யில் பெறலாம், அஞ்சல் செலவு பதிப்பகம் ஏற்கும்.
சங்கப் பலகை மையங்களிலும் நேரில் கிடைக்கும்.

**ரோஹினி ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை - 14.**

# சொல்லின் செல்வன்

## காட்சி: 1

*காலம் : மாலை*

*இடம் : பம்பைப் பொய்கைக் கரை*

*(தாமரையும் குவளையும் மலர்ந்து இருக்கின்றன. மயிலும் அன்னமும் நடக்கின்றன. மான் நிற்கிறது. சீதையின் உருவெளித் தோற்றம் இராமன் கண்களுக்குப் புலப்படுகின்றது. மங்கிய ஒளியில் இக் காட்சி சீதை 'கல்', 'கல்' என்ற ஒலி எழுப்பி அன்னம் போன்று நடந்து செல்கின்றாள். அன்னப் பறைவை ஒன்றை இராமன் காண்கின்றான். சீதையின் உரு வெளித் தோற்றம் மறைகின்றது.)*

*இராமன்: அன்னமே! சீதையின் நடையைக் கற்கும் நீ அவள் எங்கே இருக்கின்றாள் என்று கூறக்கூடாதா ? அவள் நடையை அறியும் நீ, அவள் சென்ற இடத்தை உரையாயா?*

*உருவெளி: (சீதையின் மலர்ந்த முகம் காண்கிறான்; அவள் புன்முறுவல் செய்கிறாள். மறைகிறாள்.)*

*இரா : (தாமரை மலரைக் கையிலேந்தி நிற்கிறான்)*

*வண்ணத்தாமரையே! அவள் முகத்தை மட்டும் நினைவுக்குக் கொண்டு வருகிறாய். அவள் முழு வடிவத்தைக் காட்டக் கூடாதா? அவள் நிறம் உன்னிடம் இருக்கின்றது. ஆனால் அவள் அழகு உன்னிடம் இல்லை. அவள் பொலிவை நீ பெற வேண்டுமானால் போ, நீரில் நின்று தவம் செய்; முயன்று பார் (அதனை வீசி எறிந்து விடுகிறான்.)*

**இரா :** கருங்குவளையே ! அவள் கண்களை நினைவு படுத்துகின்றாய். அவள் பஞ்சுபூத்த விரலாள்; பவழம்பூத்த அடியாள்; என் நெஞ்சுபூத்த நிலை யாள்; குவளையே! நஞ்சு பூத்த உன் சிரிப்பால் என்னை நலிவிக்கின்றாயே!

**உருவெளி:** (மயில்போல் நடக்கின்றாள் சீதை)

**இரா :** (மயிலைப் பார்த்து) ஆடும் களிமயிலே! சீதையின் சாயலுக்குத் தோற்று ஓடிய நீ இன்று ஆடுகின்றாய்; தோகை விரித்து ஆடுகின்றாய்; உன் விரித்த தோகையில் ஆயிரம் கண்களைப் பெற்றி ருக்கின்றாய்; இந்த ஆயிரம் கண்களுக்குமா சீதை அகப்படவில்லை!

**உருவெளி :** (சீதை கோபமாக விறுவிறுப்போடு நடக்கிறாள்)

**இரா :** இவள் என்னோடு முரண்கொண்டு விறுவிறுப் பாகப் போகின்றாள். அவள் எங்கே போவாள்? தாய் வீட்டுக்குத்தான் போவாள். (மீண்டும் தாம ரையை எடுத்து விளித்து) திருமகள் உறையும் தாம ரையே! திருமகளாம் என் சீதை உன்னிடம்தான் வந்துமீண்டும் குடிபுகுந்திருக்க வேண்டும்; நீயே அவளை இல்லை என்று கூறிவிட்டால் நான் வேறு எங்குத்தேடுவேன்? வண்ணத் தாமரையே! சீதையின் எண்ணத்தை என்னிடம் உரைக்கக் கூடாதா?

**உருவெளி :** (சீதை தனியாகச் சோகத்தோடு முகத்திரையிட்டு வேறுபுறம் திரும்பி நிற்கிறாள்.)

**இரா :** ஓவியம் புகையுண்டது போல் சோகத்தோடு நிற்கிறாள். முன் அவள் இடைதான் மெலிந் திருந்தது; இப்பொழுது அவளே மெலிந்து நிற்கிறாள். முன் அவள் குளிர்ந்த கண்களை 'மழைக்கண்' என்றேன். இப்பொழுதோ கண்ணில்

மழையே பொழிகிறதே! மழைக்கண் என்பதை நிறுவி விட்டாளே! மானே! நானே! ஒருக்காலும் உன்னைப் பின்தொடரேன்!

இலக்குவன் : (நுழைதல்) அண்ணா! யாருடன் பேசுகின்றீர்? அண்ணியைக் கண்டு விட்டீர்களா?

இரா: அதோ அவள் நிற்கிறாளே. அவள் உன் கண்ணுக்குப் புலப்படவில்லையா? அவள் இம்மான் வேண்டாம் என்கிறாள். பொன்மான் வேண்டுமாம். தம்பி, நீ இங்கேயே காவ லாக நில். இதோ ஒரு நொடியில் அப் பொன்மானைப் பிடித்து வருகிறேன்.

இல : அண்ணா ! மீண்டும் பழைய நினைவுகளா? நாம் இப்பொழுது எங்கே இருக்கின்றோம்?

இரா : உன் அண்ணியைப் பிரிந்த நிலையில் இருக்கிறோம்? (கண்களில் நீர்மல்க நிற்கிறான்) அவள் எனக்காக உணவு சமைத்து வைத்திருப்பாள். அருந்தும் மெல்லடகு இடுவாள் ; நீயும் வா.

இல : அவள் இடுவாள்; நாம் தொடுவோம். உங்களை மறந்து இப்படிக் கனவு உலகத்தில் சுற்றுகிறீர்கள்.

இரா : அங்கேதான் என் சீதையைக் காணமுடிகின்றது; நனவில்------

இல : அன்னையைத் தேடிக் காண்போம்; கற்பனை மறந்து உண்மைக்கு வருவோம்

## காட்சி : 2

### மலைச்சாரல்

(வில்லேந்திய கையராகி இராமனும் இலக்குவனும் சபரி காட்டிய மலை நோக்கிச் செல்கின்றார்கள்)

இல : அண்ணா! இப்படியே செயலற்று நின்றால் எதை யும் செய்ய இயலாது. அண்ணியைத் தேடும் முயற்சியில் நாம் திண்ணமாக நிற்க வேண்டும். இதுதான் சபரி காட்டிய மலை.

இரா : அதோ பார். வானரர் நம்மைக் கண்டு அஞ்சி அகலுகின்றார்கள். (மற்றோர் புறம்)

(சுக்கிரீவன் உள்ளே வருகின்றான். அனுமன் அவனைத் தொடர்கிறான்)

சுக் : யார் இவர்கள்? நம் பகைவரோ? வாலி ஏவலினால் தான் வந்திருக்க வேண்டும். வரித்த சிலையர், மலை யனைய தோற்றத்தர்; இவர்கள் யாராக இருக்கக் கூடும்?

அனு : தேவர், தானவர், அல்ல அல்ல; தாழ்சடைக் கடவுள்; அதுவும் அன்று :இவர் போர்த்தொழிலர்; தவமெய்யர்; கைச்சிலையர் ; தருமத்தின் காவல ராகக் காணப்படுகின்றார்கள். யாராக இருக்கக் கூடும்? நானே சென்று அறிந்து வருகினறேன். நீங்கள் ஒதுங்கி இருங்கள். (வேறு புறம்)

(அனுமன் இராம இலக்குவரை அணுகி அன்பினால் அவர்களை நோக்குகின்றான்)

அனு : (தனக்குள்) வேங்கையும் களிறும் வேகம் அடங்கி நிற்கின்றன. மயில் முதல் பறவைகளெல்லாம் இவர்க்கு விரிசிறை மறைத்து நிழலைத் தருகின்றன. எழில் முகில்கள் இவர்க்கு நீர்த்திவலை சிந்திக் குளிர்விக்கின்றன. கற்களும் மலர்களைப் போல் கனிகின்றன. புல்லும் மரமும் இவரைக்கண்டு சாய்ந்து பணிகின்றன. இவர்கள் தருமத்தின் உரு வாகக் காட்சி அளிக்கின்றனர். இவர்களைக் காணுந்தோறும் என்பு நெக்கு உருகின்றது. அள வற்ற காதல் என் பால் தோன்றுகின்றது. அன்

பினுக்கு அளவு இல்லை. என் இதயம் இவர்களை நோக்கிக் குளிர்கின்றது. (அருகிற் சென்று) நும் வரவு நல் வரவு ஆகுக.

**இரா :** நல்வரவு நல்கிய நம்பி, நீ யார்?

**அனு :** மேகம் எனத் திரண்ட கோல மேனிய! தாமரை ஒத்து அலர்ந்த அழகிய கண்ண! யான் காற்றின் வேந்தனுக்கு அஞ்சனை வயிற்றின் வந்தேன். நாமமும் அனுமன் என்பேன். இம்மலையில் வாழும் எரிகதிர்ப் பருதிச்செல்வன் சுக்கிரீவன் என்பவனுக்கு ஏவல் செய்வேன்; தேவ நும் வரவு நோக்கிச் சுக்கிரீவன் ஏவ உம்மிடம் வினவி விசாரிக்க வந்தேன்; அவர் ஆவலோடு காத்து நிற்கின்றார்.

**இரா :** (இலக்குவனை நோக்கி) வில்லார் தோள் இளையவீர! ஆற்றலும், நிறையும், கல்வியும், அறிவும், எல்லாம் நிறைந்தவனாகக் காணப்படுகின்றான். இவன் விரிஞ்சனோ? அன்றி விடைவல்லானோ? இவன் கல்லாத கலையும் பயிலாத வேதமும் இல்லை என்பது இவன் சொல்லாலேயே விளங்குகின்றது. யார் இச் சொல்லின் செல்வன்? இச் சொல்லின் செல்வன் யார்? ஒன்றும் விளங்கவில்லையே ? (அனுமனை நோக்கி) நல்லது, உங்கள் கவிக்குலத்து இறைவன் சுக்கிரீவனைக் காணும் விருப்பத்தினால்தான் வந்திருக்கிறோம். எங்கே இருக்கின்றார்? அங்கே எங்களை அழைத்துச் செல்ல முடியுமா?

**அனு :** எம் தலைவரை ஆதரித்து அவரைக் காண்பதற்கு அணுகினீர் என்றால், அவர் செய்தது அரிய தவம் என்றே கூறுவேன். கதிரவன் மகனாகிய எம் தலைவர் சுக்கிரீவரை, இந்திரன் மகனாகிய வாலி அன்பற்றுச் சீறித் தாக்க, அதே துன்பத்தால் அருவி வீழும் அக்குன்றில் என்னோடு வாழ்கின்றார்.

உம் வருகையால் அவர் வாழ்வு இனித்தான் உயரப்போகிறது. அவர் செய்த அரிய தவமே உங்களைக் கொண்டு வந்து நிறுத்தியுள்ளது. எமக்கு அபயம் நல்கிக் காக்க வந்த முதல்வர் நீர். வருக வருக என்று வாழ்த்தி வரவேற்கின்றேன். உங்கள் பெருமையை நான் உணர்கிறேன். ஆனால், ஒன்று; எம் தலைவர் உங்களை யார் என்று கேட்டால், என்னவென்று கூறுவது? சிறிது விளம்பினால்---

**இல :** யாரா? கேள் சொல்லுகிறேன். சூரியன் மரபில் தோன்றிய வீரன் அயோத்தி மன்னன் தயரதன் அவரைத் தெரியுமா? அவர் திருமகன்தான் இவ் ஆண்தகை. அவன் ஏவ, தன்னுடைய உரிமைச் செல்வம் தம்பிக்கு நலகி, நல் நெடுங்கானம் சேர்ந்துள்ளார். இவர் நாமமும் இராமன் என்பார்கள். இந் நெடுஞ்சிலை வல்லானுக்கு ஏவல் செய்யும் அடியேன் யான். இராவணன் இழைத்த புன்தொழிலால் அன்னை சானகி....

**அனு :** விளங்குகிறது ஏறக்குறைய எங்கள் தலைவன் கதையும் இதோடு ஓரளவு ஒத்து இருக்கின்றது. நீவிர் இவ்விடத்தில் இருப்பீர்; யான் சென்று எம்தலைவனை இப்பொழுதே கொணர்கின்றேன் சிறிது பொழுதில். (வணங்கி விடைபெற்றுப் போதல்).

## காட்சி : 3

**அனு :** ஐயா, தயரதன் தந்த ஆட்சியைத் தாயின் ஆணையால் இளையவற்கு உதவி அவர் இங்கு வந்துள்ளார்.

**சுக் :** என்ன? மறுபடியும் சொல்!

அனு: இளையவற்கு உதவி அவர் இங்கு வந்துள்ளார் என்றேன்.

சுக் : இளையவனை உளையச் செய்து இன்னல் இழைக்கின்றான் என் அண்ணன். அவன் உதவு கின்றான். முற்றிலும் முரண். சரி, வா. அவரைக் காணச் செல்வோம்.

(சுக்கிரீவன் இராம இலக்குவரைக் கண்டு அப்ப டியே திகைத்து நிற்கின்றான்)

சுக் : (அனுமனை நோக்கி) குண்டலம் துறந்த கோலமும். புண்டரிகத்தை ஒத்த குளிர்ந்த கண்ணும், மரகத வண்ணமும் என் உள்ளத்தைக் குளிர்விக் கின்றன. இவர் உண்மையில் அமரர்க்கும் அமரர். மாறி இப்பிறப்பில் மானிடர் ஆகிவந்துள்ளார். சிவனையும் அயனையும் மற்றும் உள்ள பிறவி அனைத்தையும் மானுடம் வென்றுவிட்டது. மனிதனின் வெற்றிதான் இராமனின் திருஉருவம். சென்று தரிசிக்கிறேன் (அருகில் செல்கிறான்)

(இராமனும் கை நீட்டி வரவேற்கின்றான்)

இரா : சபரி என்பாள், நீ இம்மலையில் வந்து எய்தி இருந்த தன்மையை இயம்பினள். யாங்கள் உற்ற கையறு துயரம் உம்மால் கடப்பது கருதி வந்தோம். உம்மால்தான் எங்கள் துயரம் தீரவேண்டும்.

சுக் : முரணுடைத் தடக்கை ஓச்சி என் முன்னவன் பின் பிறந்த என்னைத் துரத்தித் துரத்தி உலகெங்கும் தொடர்ந்தான். இக் குன்றில் அரண் அடைந்து உய்ந்தேன். உயிர் துறக்கவும் முடியாமல் தவிக் கின்றேன். புவிக்கு நாயகனே! சரண் உன்னைப் புகுந்தேன். என்னைத் தாங்குதல் நும் கடமை.

இரா : (இரங்கி நோக்கி) உமக்கு உரிய துன்பங்கள் முன் நாள் சென்றன போக இனிமேல் வந்து உறுவன தீர்ப்பேன். இன்ப துன்பங்கள் அனைத்தும் எமக்கும் உமக்கும் நேர்; வானிடை மண்ணிடை உம்மைச் செற்றவர் என்னைச் செற்றார்; தீயரே எனினும் உம்மோடு உற்றவர் எனக்கும் உற்றார். உம் கிளை எனது; என் காதல் சுற்றம் உன் சுற்றம்; நீர் என் உயிர்த்துணைவர்.

அனு : (எழுந்து வாழ்த்துகின்றான்) ஆர்த்தது குரங்குச் சேனை. விண்ணோர் தூர்த்தனர் பூவின் மாரி. அண் ணல் வார்த்தை மறையினும் மெய்யது; உயர்ந்தது. வாழ்க அவர் கூற்று. தூண் திரள் தடந்தோள் மைந்த! தோழனும் நீயும் வாழி! ஈண்டு நீவிர் நம் கோயில் எய்தி இனிதின் நல் இருக்கை காண வேண்டும்; அருள் செய்து எழுக.

இரா : விழுமிது அப்படியே ஆகுக, மண்ணும் விண்ணும் இருக்கும்வரை நம் நட்பு நிலைத்திருக்கும். வாழ்க நம் நட்பு.

அனு : வாழ்க எம் தலைவர்.

## காட்சி : 4

(சோலையில் சுக்கிரீவனும் இராமனும் பூவணையில் பொலிந்து அன்போடு அளவளாவுகின்றார்கள். கனியும் கிழங்கும் காயும் தூயன இனியன முன் வைக்கின்றான். இராமன் அவற்றைத் தின்று கொண்டே பேசுகின்றான்)

இரா : துணைவியின்றித் தனித்து உபசரிக்கின்றாயே? நீயும் மனைக்குரிய மனைவியை என்னைப் போல் பிரிந் துள்ளாயோ? (சுக்கிரீவன் பேசாதிருத்தல்) ஏன்

மௌனம் சாதிக்கின்றாய்?

அனு : (கை கூப்பித் தொழுது உரைக்கின்றான்) நீதி நிறைந்த தலைவனே! சிறிது செவிசாய்க்க வேண்டுகின்றேன். அன்று நடந்தகதை – அது மிக நீண்ட கதை ... சுருக்கமாக உரைக்கின்றேன். கேட்க வேண்டும்.... இவர் அண்ணன் ஆற்றல் மிக்க வாலி முன்னொரு சமயம் மாயாவி என்பானோடு பெரும் போர் செய்தான். இருவரும் ஓர் பிலத்துள் நுழைந்தனர். அவர்கள் திரும்பி வரவே இல்லை. ஆதலால் மந்திரச் சுற்றத்தவர் சுக்கிரீவனை ஆட்சிக் காவல் செய்ய ஏவல் இட்டனர். அவர்கள் இட்ட பணியை மறுக்க முடியாமல் எம் தலைவர் ஆணை ஏற்று ஆட்சி செலுத்தினார். மாயாவி திரும்பவும் மேலே வராமல் இருக்கப் பிலத்து வாயைக் கற்களால் மூடினர். முடிந்த கதை என்று எண்ணினோம் முடியவில்லை. மாயாவியைக் கொன்று வாலி பிலத்தின் வெளியே வந்தான். அவன் கண்ட காட்சி அவனையே திகைக்க வைத்தது. அவன் தவறாகக் கருதிவிட்டான். வருத்தினான் தம்பியை; வலிமை மிக்க வாலியின் கொலைத்தொழிலுக்கு அஞ்சி இவர் ஓடி ஒளியாத இடமே இல்லை. அவன் வலிக்கு அஞ்சி ஓடிப்பிழைக்க இம்மலையை நாடி அரண் புகுந்துள்ளார். முனிவர் ஒருவர் இட்ட சாபத்தால் வாலி இங்கு வரமுடியாது. உருமை என்பாள் இவர் தாரத்தையும் அவன் விரும்பினான். இதுதான் நடந்த வரலாறு. தாரம் இழந்து தனித்து இருக்கின்றார் எம் தலைவர் சுக்கிரீவன்.

இரா : தம்பிக்கு என் அரசு உரிமையை நான் நல்கினேன். இங்கு இவன் தன் தம்பியின் தாரத்தை வௌவுகின்றான். இச்சொல் என்னால் தரிக்க முடியாது. உலகம் ஏழும் வந்து அவனுக்கு உதவி செய்தாலும், வாலியின் வலியை வீழ்த்தி நும் தாரமும் உமக்கு

இன்றே தருவேன். அவன் உறைவிடம் காட்டுக.

சுக் : விழுந்தது இனி வாலி தன் வலி. (சிறிது பொறுத்து) மிக்க நன்றி. எனினும் நாங்கள் எண்ணுவது ஒன்று உண்டு மீண்டும் கலந்தாலோசித்து எங்கள் கருத்தினை உணர்த்துகின்றோம். நாங்கள் சிறிது தனியே இருந்து பேசவிழைகிறோம். மாருதி! இங்கு என்னோடு வா.

## வேறு புறம்

அனு : உன்னினேன் உம் உள்ளத்தில் உள்ளதை அன்ன வாலியைக் காலனுக்கு அளிப்பது ஓர் ஆற்றல் இராம இலக்குவர்பால் இல்லை என்று ஐயம் கொள்ளுகின்றீர்.

சுக் : வாலியின் வலிக்கு இவ்விளைஞர்கள் முன்னிற்க முடியுமா?

அனு : தாளிலும் தடக்கையிலும் சங்கு சக்கரக் குறி உள் ளன. எங்கும் இத்தனை இலக்கணம் யாவர்க்கும் இல்லை. செங்கண் விற்கரத்து இராமன் அத்திரு நெடுமாலே இங்கு உதித்தனர். ஈண்டு அறம் நிறுத்துதற்கு. அவரை நீர் ஐயுறல் வீண். அன்னவர் பெரு வலி யாற்றலை அறிதிர் என்னின் உண்டு ஓர் உபாயம்; மராமரங்கள் ஏழும் அவர் விற்கரத்து ஓர் அம்பே துளைக்கும். அவரைக் கண்டு நீர் அமைதி கொள்ளுதிர். அவர் ஆற்றலை உணர அதுதான் சரியான வழி.

சுக் : (நுழைந்து கொண்டே) அதுதான் சரியான வ. ஐயா! அதோ நிற்கின்றனவே ஏழு மராமரங்கள். அவற்றை ஒரே அம்பால் சாய்க்கவேண்டும் அப் பொழுதுதான் என் மனத்தில் உள்ள ஐ. ம் சாயும்.

**இரா** : (சிரிக்கின்றான்) அப்படியே செய்வோம். (அம்பு விடுகின்றான்; ஏழு மரங்களும் சரிந்துவிழுகின்றன; அதனைக் கண்டு சுக்கிரீவன் வியக்கிறான்.)

**சுக்** : ஏழு மரத்தைச் சாய்த்த அம்பு ஏழு உலகமும் சென்று திரும்பிவிட்டது. ஏழு என்ற பொருளே இல்லாமல் செய்துவிட்டீரே. ஏழு! எழுவோம் போருக்கு! ஒழிக வாலி! வீழ்க அவன் வலி!

## காட்சி : 5

## வாலியும் தாரையும்

**வாலி** : தாரை உன் வேல்விழி ஒன்றுக்குத்தான் நான் அஞ்சுகிறேன். வேறு எந்தப் படைக்கும். நான் அஞ்சியதில்லை. படைகள்தாம் எனக்கு அஞ்சும்.

**தாரை** : என் விழிக்கு அமுதாகும் வேந்தே! வீரத்தைத் தவிர வேறு விளம்பத் தெரியாதா உமக்கு.

**வாலி** : விளம்புகின்றேன் கேள். நமக்கு உடல்தான் இரண்டு! உயிர் ஒன்று. இதைவிட நான் எப்படி நம் உறவை விளக்க முடியும்.

**தாரை** : இதைவிட அதிகம் தேவை இல்லை. அதெல்லாம் சரி. இப்படிப் பேசுகின்றீரே, நீர் ஏன் உம் தம்பி மனைவியையும் இங்கு அழைத்து வந்தீர். உங்கள் காதல் முழுமையானது என்று எப்படிக் கூற முடியும்?

**வாலி** : அதனால் என் காதல் குறைவு என்று கூற முடியுமா? அவள் இன்பத்துக்கு உரியவள். நீ என் அன்புக்கு உரியவள். அவள் கள்; நீ தேன். குழந்தைகள் பட்டுப் பூச்சியை ஏன் வைத்து விளையாடுகின்றன!

தாரை : வண்ண நிறத்திற்கு! நான் கிழவியாகிட்டேன். அவள் இளங்குமரி.

வாலி : உண்மைதான். நீ எனக்கு உரிமையாகிவிட்டாய். கிழவி என்றால் உரிமையானவள் என்பது பொருள். அவள் எனக்கு ஒரு பொழுதுபோக்கு; ஆனால், நீ என் வாழ்வுக்குத் துணை.

சுக் : (நுழைந்து) வாழ்வுக்குப் பகை! பகை! வா வெளியே! இதோ முடிகிறது உன் பகை. அகப்பட்டுக்கொண் டாய் சரியான வகை ! வா போருக்கு! சுக்கிரீவன் உன்னைப் போருக்கு அழைக்கின்றேன்.

வாலி : சிங்கத்தின் குகையில் சிறுத்தை உறுமுவதா? என்ன வியப்பாக இருக்கிறது? இதோ வந்துவிட்டேன். இதோ வந்துவிட்டேன்!

தாரை : வேண்டாம் எனக்கு ஏதோ அச்சமாகத்தான் இருக்கிறது இந்த முறை.

வாலி : விலக்காதே! விடு,விடு! அவன் உரத்தைக் கலக்கி உயிர்குடித்து விரைவில் மீள்குவேன். மலைக்குல மயிலே நீ என்னை மறிக்காதே.

தாரை : கொற்றவ! நின் தோள்வலிக்கு அவன் முன்னாள் இற்றனன். பெயர்த்தும் போர் செய்தற்கு உற்றனன் என்றால் அவனுக்குப் பெருந்துணைவன் ஒருவன் இருக்க வேண்டும்.

வாலி : என் வலியறியாமல் நீ பேசுகின்றாய்! வாலி என்ற பெயரே வலிமையை ஒட்டித்தானே அமைந்தது. மந் தரமலையை வாசுகி என்ற கயிற்றால் கடைந்த போது தேவரும் அசுரரும் களைத்துச் சலித்த போது நான் ஒருவனே நின்று இழுத்துக் கடைய வில்லையா? அவர்கள் யாவரினும் நான் வலியன் என்பதை இந்நிகழ்ச்சி காட்டவில்லையா! மற்றும்

பகைப்போரின் பாதி வலிவு எனக்கு வந்துசேரும் என்ற வரமும் மறந்துவிட்டாயா?

தாரை : அரசே! அவனுக்கு இன்னுயிர் நட்பமைந்த இராமன் என்பவன் உன் உயிர் கோடலுக்கு உடன் வந்துள்ளான் என்று சொல்லக் கேட்டுள்ளேன்.

வாலி: இதை வேறு யாராவது சொல்லியிருந்தால் அவர்கள் விண்ணுலகைக் கண்டிருப்பார்கள். உலகத்தில் அறம் நிலைநிறுத்த வந்த அண்ணலுக்கு ஊறு கற்பித்தாய். நீ பெண். அதனால் பிழைத்துக் கொண்டாய்! தாயின் ஏவலால் தன் தம்பிக்கு நாட்டை நல்கிய நம்பியையா இவ்வாறு கூறினாய்? தம்பியர் அல்லது தனக்கு வேறு உயிர் இல்லை என்று தருக்கி வாழ்பவன் ! அவனா என் தம்பியும் நானும் உற்ற போரில் இடையே அம்பு தொடுப்பான் என்று நீ கருதுகின்றாய்?

(தாரை கண்களில் நீர் கலங்க நிற்கிறாள்.)

வாலி: இருத்தி நீ! கண்ணிமைப்பதற்கு முன் அவன் உயிரைக் குடித்து உடன் வந்தாரையும் கருத்து அழித்துத் திரும்புவேன். கலங்காதே. தடுக்காதே என்னை.

## காட்சி : 6

இலக்: தன் அண்ணனைக் கொல்ல மற்றொருவனைத் துணையாக நாடுகிறான் சுக்கிரீவன். இவன் நமக்கு மட்டும் பகை எண்ணான் என்பதற்கு என்ன சான்று உள்ளது? எதைப் பொறுத்தாலும் பொறுக்கலாம்; அண்ணனைக் காட்டிக் கொடுக்கும் கீழ்மையை மட்டும் என்னால் பொறுக்க முடியாது.

இரா: உலகில் எல்லா உடன்பிறந்தவர்களும் ஒற்றுமையா கப் பாசத்தோடு வாழ்ந்துவிட்டால், பரதன் உத்த மன் என்ற புகழ் எப்படி நிலவும்? நெல்லுக்கு உமியுண்டு, நீருக்கு நுரையுண்டு. பூவிற்குப்புல்லிதழ் உண்டு. இந்தக் குறைகளைக் கண்டு இவற்றைப் புறக்கணிக்க முடியுமா? குற்றமற்றவரைத்தான் துணை நாடுவோம் என்றால், அது அரசியலுக்கு ஒவ்வாது; கூட்டு அமைப்பு உண்டாக்கவே முடியாது. அதோ வாலியும் சுக்கிரீவனும் நெருங்கி விட்டார்கள்.

(இருவரும் போரிடுகின்றனர். சுக்கிரீவன் நன்றாகத் தாக்கப் பெறுகிறான். இராமன் மறைந்து நிற்கும் இடத்தில் ஏக்கத்தோடு பார்க்கிறான்)

இரா: (சுக்கிரீவனைப் பார்த்து) உங்கள் இருவரில் யார் வாலி என்று காணமுடியவில்லை. அதனால்தான் செயலற்று இருந்தேன். கொடிப்பூ அணிந்து போருக்கு நில். அப்பொழுதுதான் வேறுபாடு தெரியும். (இருவரும் மீண்டும் மலைதல். சுக்கிரீவன் கீழேயும் மேலே வாலியும்; ஓங்கிக் குத்த முயல்கிறான்,

(இராமன் அம்பு பட்டு வாலி சாய்கிறான்.)

வாலி: (அந்த அம்பைப் பிடுங்கி அதனை ஆராய்கிறான்) தேவரோ? அவர் இச்செயலுக்கு ஆவரோ? அவர்க்கு ஆற்றல் உண்டோ? திருமாலின் சக்க ரமோ? நீலகண்டன் நெடுஞ்சூலமோ? முருகன் வேலோ? இந்திரன் வச்சிரப்படையோ? இச்சரத்தை

வில்லினால் செலுத்த முடியாது. சொல்லினால் நெடு முனிவர் தூண்டியிருக்க வேண்டும். இல்லை, இது சாதாரண அம்புதான். இதில் ஏதோ பெயர் எழுதியிருக்கிறதே!

சுக்: அண்ணா, மன்னிக்க முடியாத குற்றம் இழைத்து விட்டேன். (அவன்மீது பாசத்தால் சாய்தல்) என்னை மன்னித்துவிடு.

வாலி: பெயர் இராமன்; இராமன்; நீயா? இல்லறம் துறந்த நம்பி எங்களுக்காக வில்லறம் துறக்க வேண்டுமா? உன்னால் உன் மரபு மாசுண்டது. நல்லறம் கெட்டுவிட்டது. ஓ! இதுவும் ஓர் ஓங்கு அறமோ? மறைந்திருந்து அம்பு செலுத்துவதும் மன்னர் வகுத்த புதிய அறமோ? இது எனக்குத் தெரியாது. இராமனே முறை திறம்பினான் என்றால், இந்த உலகத்து மற்றைய இழிந்துள்ளோர் இயற்கை!

(இராமன் அவன்முன் காட்சி தருதல்)

வாலி: வாய்மையும் மரபும் காத்து மன் உயிர் துறந்த வள்ளல் உன் தந்தை. அத்தகைய தூயவன் மைந்த னல்லவா நீ? பரதன் முன் பிறந்தவன் அல்லவா? தீமை என்பது மற்றவர்கள் செய்யக்கூடாது என்று வகுத்துக்காட்டித் தான் செய்தால் அது நன்மை யாகிவிடுமா? குலம், கல்வி, கொற்றம், நலம், தலைமை, வெற்றி இவையெல்லாம் பெற்ற நீயா உறுதி குலைந்து அறுதி செய்தாய்? அரசியல் தருமமெல்லாம் உங்கள் குலத்து உதித்தவர்கட்கு எல்லாம் உடைமையன்றோ? ஓவியத்து எழுத ஒண்ணா உருவத்தாய்! ஆவியை, சனகன் பெற்ற அன்னத்தை, அமிழ்தின் வந்த தேவியைப் பிரிந்த பின்னை திகைத்தனை போலும் செய்கை! அரக்கர் ஓர் அழிவு செய்தால் அதற்கு வேறு ஓர் குரக் கினத்து அரசைக் கொல்ல மனுநெறியா கூறியுள்ளது? இரக்கம் எங்கு உகுத்தாய்? என்பால் எப்பிழை கண்டாய்? பெரும் பழியை நீ பூண்டால் புகழை யார் தாங்கவல்லார்? கலிகாலம் வருகிறது என்று சொல்கிறார்களே, அது இந்தக் கொலை

*யிலா புகவேண்டும். ஒழுக்கம் விழுப்பம் என்பது எல்லாம் மெலியவர்க்கு வலியவர் உரைக்கும் வெற்றுரையோ! கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவ! பெற்ற தந்தை பூட்டிய செல்வம் ஆங்கே தம்பிக்குக் கொடுத்துப் போந்தாய்! நாட்டில் நல்ல புகழை நிலைநாட்டினாய்! காட்டில் என் தம்பிக்கு இங்கே ஆட்சியை நல்கி மற்று இங்கே பழியைத் தேடிக் கொண்டாய்! முறை திறம்பிய நீ, இலங்கை வேந்தன் முறை அல்லன செய்துவிட்டான் என்று முனிகின்றாயே! அது எப்படிப் பொருந்தும்?*

*இருவர் போர் செய்கிறார்கள். அவர்கள் இருவரும் உறவினர்கள். ஒருவர் மேல் கருணை தூண்ட ஒருவர்மேல் ஒளிந்து நின்று அம்பு எய்தல் தருமமா? அல்லது இச்செயலுக்கு வேறு ஏதாவது புதிய பெயர் தரப் போகிறாயா? ஐயா! உம்செய்கை வீரம் அன்று; விதி அன்று; மெய்ம்மையின் வழி யும் அன்று. நின் மண்ணுக்கு நான் என்னபாரமா? நான் உனக்குப் பகைவனா?*

*பண்பு அழிந்து, ஈரம் இன்றி, இது செய்தாய்! என் செய்தாய் நீ?*

*அறம் காக்கின்ற பெருமை என்பது இதுதான்? ஒருமை நோக்கி ஒருவனுக்கு உதவுவதுதானா அறம்? இது அறம் அல்ல; அரசியல் முயற்சி என்று கூறுகின் றாயா? சிங்கத்தை விட்டுச் சிறுமுயலைப் பற்றுவது தான். முயற்சியா? திங்களுக்குக் களங்கம் உண்டு; சூரியன் மரபுக்கு ஓர் களங்கம் வேண்டும் என்று தெரிந்து செய்தாயா? மற்று ஒருத்தன் வலிந்து போருக்கு அறைகூவ, அவனை நோக்கி நான் சென்றேன். என்னை ஒளிந்து உயிர் உண்ட நீ, நான் இறந்து வீழ்ந்தபின் சிங்கஏறு என நிமிர்ந்து*

நிற்கிறாயே?

நூல் இயற்கையும், நும் குலத்துப் பெரியோரின் குல இயற்கையும், சீலமும் போற்றவில்லை. நீ வாலியை வீழ்த்தவில்லை; அறவேலியைப் பிரித்தாய். நீயும் ஒரு வெற்றிவீரன் என்று கூறிக்கொள்ள வேண்டியதுதான். தாரம் மற்று ஒருவன் கொள்ள அதற்கு உன் வீரமும் பழுதாக வேண்டுமா? மறைந்து நின்று நிராயுதன் மார்பில் எய்யவா உன் வில் திறமை பயன்பட்டது.

**இரா:** போதுமா பேசியது? இன்னும் பேச வேண்டுமா? நீ செய்தன நினைத்துப்பார். பிலம் புகுந்தாய், திரும்பி வரமாட்டாய் என்று முதியவர் சொல்ல, அதற்காக ஆட்சி ஏற்றான் உன் தம்பி. அவனைக் கொல்ல முயன்றது முறையா? அபயம் என்று உன்னை அணைந்த அவனுக்கு அரண் செய்யாமல் அழிவு நினைத்தாய். தம்பி என்றும் அருள் செய்யவில்லை. இவற்றை எல்லாம்விட நீ செய்தது மன்னிக்க முடியாத குற்றம். அருமை உன் தம்பியின் ஆர் உயிர்தேவியை அடைய நினைத்தாயே அதுவே உன் பெருமையை நீக்கிவிட்டது. ஆதலால்தான் உன்னை ஒழிக்க முயன்றேன். அதைவிட சுக்கிரீவன் என் உயிர் நண்பன் என்பதாலும் உன்னைக் களைந்தேன்.

**வாலி:** நாங்கள் குரங்கினத்தைச் சார்ந்தவர்கள் என்பதை மறந்து பேசுகின்றாய்! ஒருவன் ஒருத்தி என்பது எங்களுக்கு இல்லை. இந்த அடிப்படையை மறந்து என் மீது குற்றம் சுமத்துகிறாய்.!

**இரா:** இனம் குரங்கினமாகலாம். ஆனால் நீ அறிவு நிரம்பியவனாய் இருக்கின்றாய். உன்னை மனிதனாகவே நான் மதிக்கிறேன்.

**வாலி:** சரி, ஒப்புக்கொள்கிறேன். நான் மேலும் விவாதிக்க

விரும்பவில்லை. ஆனால் ஒன்று மட்டும் கேட்கிறேன். அதற்கு விடை நல்கினால் போதும். செருக்களத்தில் நேரே நின்று போர் செய்யாமல் வேடுவரைப் போன்று மறைந்து அம்பு எய்தது ஏன்? அதை எப்படிச் சரி என்று நிறுவப் போகிறாய்?

(இராமன் தலை குனிகின்றான்)

**இலக்:** முன்பு நின் தம்பி வந்து சரண் புகுந்தான். முறை யற்ற உன்னைத் தென்புலத்து உய்ப்பேன் என்று செப்பினான் என் அண்ணன். போர்க்களத்தில் நீயும் உயிர்மீது விருப்புக்கொண்டு, யானும் அடைக்கலம் என்று சொல்லிவிடுவாய். அதற்காகத்தான் மறைந்து நின்று எய்தான்.

**வாலி:** இப்படிச் சொன்னால் அதற்கு நான் மறுத்துப் பேச விரும்பவில்லை. ஒன்று மட்டும் வேண்டுகிறேன். தப்பித் தவறி இந்த அம்பை என் தம்பியின் மீது மட்டும் செலுத்தவேண்டாம். அவன் தவறு செய்யக்கூடும். அப்பொழுது என்னைக் கொன்றது போல் அவனைக் கொல்லவேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன். மற்றொன்று உன்னிடம் இரக்கின்றேன். என் தம்பியை உன் தமபிமார்கள் தன் அண்ணனைக் கொல்வித்தான் என்று இகழ்ந்தால் அவர்களைத் தடுக்க வேண்டும். இதோ! இந்த அனுமனை உன் கை வில் என நினைத்துப் போற்று! இவரைக் கொண்டு இனி நீ உன் துணைவியைத் தேடிக்கொள். இதுதான் நான் இறுதியாகக் கூறக் கூடியது. (சாய்கிறான்.)

## காட்சி: 7

(சுக்கிரீவன், அனுமன், இராமன், இலக்குவன் அங்கதன் முதலானோர்.)

இரா: இலக்குவ! இனிக் கதிரோன் மைந்தனை உன் கையாலேயே மகுடம் சூட்டு.

இலக்: மாருதி! முடிசூட்டு விழாவிற்கு வேண்டுவன இப்பொழுதே கொணர்க.

(அனுமன் முடிகொண்டு வந்து தருகின்றான். இலக்குவன் சுக்கிரீவனுக்கு முடிசூட்டு கின்றான்.)

இரா: (வாழ்த்துரை வழங்குகிறான்.)

நல்லவிதமாக ஆட்சி நடத்துக ! அறவழி நின்று ஆட்சி செய்க! சிறியர் என்று இகழ்ச்சி செய்யாதே; கூனிக்குச் செய்த சிறுமைதான் என் துயருக் கெல்லாம் காரணம். மங்கையர் பொருட்டால் மாந்தர்க்கு எய்தும் மரணம் என்பது வாலியின் வாழ்வு தரும் பாடம் என்பதையும் நீ உணர வேண்டும். மங்கையராலேயே அல்லலும் பழியும் ஆதல் எங்கள் வாழ்வைக்கொண்டு நீ உணர வேண்டும். நிலையான அரசு இயற்றி, மாரிக்காலம் முடிந்ததும் உம் கடற்பெருஞ் சேனையோடும் வந்து சேர்க! போய் வருக!

சுக் : அப்படியே செய்கின்றேன்; மாரிக்காலம் முடிந்ததும் காலம் தாழ்த்தாமல் கடற் பெருஞ்சேனையோடும் வந்து சேர்கின்றேன்.

அனு: ஐயனே! நான் மட்டும் உங்களோடு வர அனு மதிக்க வேண்டுகின்றேன். நீர் ஏவுந் தொழிலை இருந்து செய்வேன; ஏற்றருள்க!

இரா: சொல்லின் செல்வ! அமைச்சன் நீ இல்லையெனில் ஆட்சியில் சுக்கிரீவன் பிழை செய்வான். நிலை கலங்கிய அவ்வரசினை நிலை நிறுத்தல் உன் கடமையாகும். நீதான் அதற்கு உரிய துணைவன்.

தருமத்தின் உருவமாக விளங்கும் சுந்தரனே! நீயும் அவனுடன் இருந்து, பின்னர் வா! இது என் வேண்டுகோள்.

**அனு:** ஆணை ஈது ஆயின் அதனையே புரிவேன். ஆழி! யாய்! வாழி நீர்.

## காட்சி: 8

### இராமன் இலக்குவன்

**இரா:** மாரிக்காலமும் மறைந்தது. சுக்கிரீவன் வாழ்வில் மயங்கினான் போல் தோன்றுகிறது. உன்னைச் சுக்கிரீவன்பால் அனுப்பினேனே என்ன ஆயிற்று?

**இலக்:** மங்கையர் திறத்தால் மாந்தர்க்கு மதியும் மயங்கும் என்பது உங்கள் வாக்குத்தானே! அதனைச் சுக் கிரீவன்பால் கண்டேன். ஆனால் நான் சென்றதும், உணர்வு பெற்றுக் கடமை உணர்வு உந்த அவனும் அனுமனும் இதோ வந்து கொண்டிருக்கிறார்கள்.

**இரா:** எனக்குத் தெரியும். சொல்லின் செல்வன் துணை யுள்ளளவும் சுக்கிரீவனுக்குப் பிழை செய்ய வாய்ப் பல்லை; வரட்டும்: இனி மேல்தான் மிகப் பெரிய கடமை காத்துக் கொண்டிருக்கிறது. அதோ அவர்களும் வருகிறார்கள்.

**சுக்:** (காலடியில் விழுகிறான்) திருந்தழை திறத்தினால் நீர் வருந்தி இருப்ப, யான் வாழ்வில் வைகினேன்; என்னை...

**இரா:** மன்னிக்க வேண்டியதில்லை. நீ தவறு செய்ய மாட்டாய். உன்னைப் பரதனாகவே கருதுகின்றேன். உன் செயலில் பிழை நேராது. மாருதி எங்கே?

சுக்: மாருதி வந்து சேருவான் கடற்பெருஞ் சேனையோடு. அதோ மாருதியும் வந்துவிட்டான்.

அனு: தானையின் அளவினை யான் எடுத்துரைப்பதை விட நிரே அடுத்துக் காண்பது மேல். குரங்குகள் அத்துணையும் தேவியை நாடித் தேடித்தரும் பணியில் இனி இறங்கும். ஐயன் கட்டளைக்காகக் காத்து நிற்கின்றன.

சுக்: நீயும் அங்கதனும் தென்திசைக்கு ஏகுங்கள். கள்ள வாள் அரக்கன் வள்ளல் தேவியை வஞ்சித்துச் சென்றது அங்குதான் என்று என் உள்ளம் கூறுகின்றது. தாரை மைந்தன் அங்கதனும் சாம்ப வனும் மற்றும் வீரர் யாரும் சேர்க நின்னொடும். வடதிசைக்குச் சதவலி ஏகட்டும்; குட திசைக் கண் வினதன் செல்லட்டும்.

மற்றும் ஒன்று கூறுவேன் கேள்: ஒரு திங்கள் முற்றுதற்கு முன் உங்கள் செயல் முற்றுப் பெற வேண்டும்.

அனு: அப்படியே செய்வோம். திங்கள் முடிவதற்குள் எங்கள் கடமையை முடிப்போம்; இதோ புறப்பட்டு விட்டோம்.

சுக்: இதோ! இங்கே இருந்து நேரே விந்தமலையை அடையுங்கள். தேடிப் பிறகு நருமதை உன்னுவீர்! அதற்குப் பிறகு ஏம கூட மலையை எய்துவீர்! பெண்ணை நதி கடப்பீர். தண்டகமும் முண்டக மும் கடந்து பாண்டுவின் மலை அடைவீர். தென் னாட்டை அடைந்து கோதாவரி பொன்முகலி கடந்து சென்றால் வேங்கடம் கண்ணுக்குப் புலனாகும். வேங்கடத்தைக் கடந்தால் தமிழ் நாட்டை அடைவீர்.

தென் தமிழ் நாட்டு அகன் பொதியில் திரு

முனிவன் அகத்தியன் வாழ் தமிழ்ச்சங்கம் சென்றால் அவன் வாழும் பொதிகைமலைக்கு வணக்கம் செலுத்துங்கள். அதனையும் கடந்தால் இராவணன் வாழ் இலங்கையை அடையலாம். எப்படியும் ஒரு திங்கள் எல்லையில் திருவினைத் தேடித் திரு வினையை முடிக்க வேண்டும்.

அனு: அப்படியே! அன்னை இருக்கும் இடத்தைத் தேடி முன்னம் வந்து சொல்வேன்.

இரா: மாருதி! உன்னிடம் தனியே சில பேச விரும்புகிறேன்.

அனு: இதோ வருகிறேன்.

(இராமனும் அனுமனும் தனியே.)

இரா: சீதையை எப்படி அறிவாய்? அவளைப் பற்றி உனக்கு ஒன்றும் தெரியாதே!

அனு: அந்த எண்ணம் எனக்குத் தோன்றவில்லை. அன்னை தேவியின் அழகிய தோற்றத்தைச் சொன்னால் கண்டு கொள்வேன்.

இரா: ஓவியத்தில் எழுதவொண்ணா உருவத்தை நான் எப்படி வடித்துக் கூறுவேன். காவியத்தில் பாட ஒண்ணாக் கவின்மிக்காளை எப்படி நான் உரையிட்டு உன்னிடம் உரைப்பேன். எந்த அடையாளமிட்டு. உனக்கு எடுத்துரைப்பேன். அவள் அங்க அடையாளங்களை அடுக்கிச் சொல்ல நான் கவிஞனல்ல, எனினும் ஒன்று கூறுவேன்.

மங்கையர் இவளை ஒப்பார் இவ்வுலகில், மண்ணில் விண்ணில் எங்கும் என்றும் இல்லை என்னும் தெளிவு உன் உள்ளத்தில் பிறந்தால் அதையே சான்று எனக் கொண்டு அவளை அறிதி.

அவள் நிலைமையையும், சூழ்நிலையையும் எல்லாம் அளந்து அவளைத் தெரிந்துகொள்.

**அனு:** அப்படியே செய்வேன்! நான் அன்னையைக் கண்டு கொள்வேன். அவர் எப்படி என்னைக் கண்டுகொள்ள முடியும். அதுதான் எனக்கு விளங்கவில்லை.

இரா: அடையாளங்கள் ஈதோ சொல்கிறேன். அதனை அவளுக்கு உரை. அவ்வுரை அவள் உயிரைத் தளிர்க்கச் செய்யும். உன்னையும் அவள் கண்டு கொள்வாள். முன்னைநாள் முனியோடு மிதிலையில் கன்னிமாடத்திடை அவளை நான் கண்டதை எடுத்துக்கூறு. வில்லை முரித்த செய்தி கேட்டு அவள்,

**சீதையின்** குரல்: "போடி! யார் அது! அந்த முனிவனொடு வந்த இளைஞனா! அவரையன்றி வேறு யாரையும் மணக்க மாட்டேன்! இது உறுதி. அவர் அல்லவேல் உயிரை மாய்ப்பேன்.

இரா: (தொடர்தல்) என்று அவள் தெரிவித்த கரையற்ற காதலை அவளுக்கு உரைத்து நினைவு படுத்து. மற்றொன்று சொல்லுகிறேன் கேள். காட்டுக்கு நீயுமா வரவேண்டுமென்று நான் கேட்டேன். அதற்கு அவள்,

**சீதையின்** குரல் : காட்டுக்கு நான் தவிர ஏனைய தங்களுக்கு இனியவோ! நான் ஒருத்திதான் கசக்கின்றேனே? என்னை விட்டுச் செல்வதுதான் தங்களுக்கு இனிமையோ?

இரா: என்று கேட்டாள். மாநகர்த் துறந்து ஏகும் நாள். இன்னும் மதிலையும் கடக்கவில்லை. அதற்குள் அவள்:

**சீதையின் குரல்:** எங்கே கானம்? கானம் வந்து சேர்ந்து விட்டோமா?

**இரா:** அனுபவமற்று வினவிய அந்தச் சொல்லையும் நினைவுபடுத்து. அவள் உடனே உன்னைத் தெரிந்து கொள்வாள். இவை எங்கள் இருவருக்கு மட்டும் தெரிந்த செய்திகள்.

**அனு:** கன்னிமாடத்திடைக் கண்டது முதல் கான வாழ்வு வரை எல்லைக் கற்களை எடுத்துக் காட்டு வது போல உணர்த்தி விட்டீர்களே! அப்படியே சொல்லி அறிவிக்கின்றேன்.

**இரா:** அதற்கு மேலும் ஒன்று உளது. எங்கள் இரு வரையும் பிணைத்து இருக்கும் மணவாழ்வின் அறி குறியாக என் கைவிரலில் இட்டுள்ள மோதிரத்தை யும் இதோ கொடுக்கிறேன். அதனையும் அவளுக்கு அளித்து, அறிஞ! நின் வினையெல்லாம் முடிக்க; முடிக; முடித்தபின் வருக!

**அனு:** வருகின்றேன். விடை பெறுகின்றேன்.

## காட்சி: 9

### அங்கதன், சாம்பவன், அனுமன் செல்லல்

**அனு:** என்ன! பெண்ணைப் பார்க்கின்றாயா?

**அங்:** இல்லை! பெண்ணை நதியைப் பார்க்கின்றேன். இந்த நதிக்குப் 'பெண்ணை' என்ற பெயர் இட்டிருப்பதால், இதனையும், கூர்ந்து கவனிக்கிறேன்.

**அனு:** வருகிற போகிற பெண்களையெல்லாம் முறைத்துப் பார்க்கிறாயே?

**சாம்:** முறைத்தும் பார்க்கின்றேன்! சிலரிடம் உரைத்தும் பார்க்கின்றேன். அழகான பெண்களாக இருந்தால்

அவர்களை முறைத்து உற்றுப் பார்ப்பது இப்பொழுது வழக்கமாகிவிட்டது.

**அனு:** அவர்கள் ?

**சாம்:** திரும்பி முறைத்துப் பார்க்கின்றார்கள். இந்தக் குரங்கு மூஞ்சியைப் பாரு என்கிறார்கள்.

**அங்:** அழகுப் போட்டி நடத்தினால் நீதிபதிகள் ஆவதற்கு நமக்குத்தான் தகுதி கிடைக்கும்; நல்ல பயிற்சி.

**சாம்:** அது சரி! நல்ல முயற்சி!

**அங:** இந்தத் தனிவழியில் தண்ணீரும் இல்லை; தண்ணிழலும் இல்லை. அதோ ஒரு பிலவழி தோன்றுகிறதே! அங்கே போய்ப் பார்க்கலாமா?

**சாம்:** பார்க்க வேண்டியதுதான் சீதையை அங்கேயும் கொண்டு போய் வைத்திருக்கலாம்.

(பிலத்துள் மூவரும் நுழைகிறார்கள்)

**அங்:** என்ன இது? ஒரே இருளாக இருக்கிறதே?

**அனு:** அஞ்சாதீர்கள்! என்னோடு மெல்ல வருக! நான் வழி காட்டிச் செல்கிறேன். இதோ ஓர் அழகிய நகர். கற்பகக் கானும், கமலக்காடும், பொற்புறு கோபுரமும், அற்புதச் சிற்பமும் அமைந்த நகராக விளங்குகிறது. அமிழ்துஉறழ் கனியும்; தமிழ்நிகர் நறவும், தனித்தண் தேறலும் எல்லாம் உள்ளன. வாவி, பொய்கை, சோலைகள் உள்ளன. எனினும், உயிர் நடமாட்டமே இல்லையே! அவை அத்துணையும் சித்திரங்களா?

**சாம்:** ஈது இராவணன் இழைத்த சூழ்ச்சிப் பொறியா? நாம் அகப்பட்டுக் கொண்டோம்; சரியாக அகப்பட்டுக் கொண்டோம்; சரியாக அகப்பட்டுக் கொண்டோம்.

**அனு:** பொறியாவது! நெறியாவது! வஞ்சனை அரக்கரை அஞ்சாமல் எதிர்ப்போம்! கவலற்க! அதோ பார் ஓர் அணங்கு. அவள்தான் சீதையாக இருக்க வேண்டும்.

**அங்:** பொற்சடையினாள்; அமைதியான தவக்கோலத்தோடு விளங்குகின்றாள்.

**அனு:** தேவியே இவள்! ஆகா! இவளா இராமனின் மனைவி? இருக்காது. முத்துமாலை, அக்குவடம் அத்தனையும் அணிந்து ஒரு தவசியாகக் காட்சியளிக்கின்றாளே! கேட்டுத்தான் பார்ப்போம்.

**சுயம்பிரபை:** (கண்விழித்து) துன்னரிய இப்பொன்னகரில் எப்படி வந்தீர்? வந்தது ஏன்? நீவிர் யாவிர்? உரை செய்க!

**அனு:** வேதனை அரக்கர் ஒரு மாயையை விளைவித்துச் சீதையை ஒளித்தனர். அவளைத் தேடித் திரிகின்றோம். தாங்கள்!

**சுயம்:** நான் சீதையல்ல. சுயம்பிரபை என்பார்கள். தாங்கள் ... இராம தூதர்களா? ஆகா! என் தவம் இப்பொழுது நிறைவேறுகிறது. உங்கள் வரவு நல்வரவாகுக. இந்திரன் சாபத்தால் நான் இந்நகரில் காவல் புரி கின்றேன். என் தோழி ஒருத்திக்கு உதவி செய்து அவள் காதலனோடு இங்கு வாழவைத்தேன். இது தான் நான் செய்த குற்றம். "இந்நகரிலேயே கிடக்க" என்று இந்திரன் சாபமிட்டான். "இராம னின் தூதுவராக வானரர் வருவர். அப்பொழுதுதான் சாப விமோசனம்" என்று கூறினான். அதன்படி நீவி ரும் வந்தீர். வாருங்கள்; உணவு அருந்துங்கள். அனு மன் ஆற்றலால்தான் இப்பிலம் பிளவு படும். நானும் வெளியேறும் காலம் வரும்.

**அனு:** சுயம்பிரபையா தாங்கள்! இதோ இந்தப் பிலத்தை இப்பொழுதே பிளக்கின்றேன். கவலை வேண்டாம்.

(அனுமன் பிலத்தைப் பிளந்து மேலேறிச் செல்லுதல்)

சுயம்: ஐயா! சாபவிமோசனம் பெற்றேன். விசும்பில் சென்று வான் உலகு அடைவேன். உங்கள் முயற்சி வெற்றி பெறுவதாக! வருகிறேன்; வணக்கம்.

அங்: சீதையைத் தேடினால் மற்றொரு கோதை அகப் படுகிறாள்.

சாம்: போலிகள் பலர் இருப்பார்கள். கண்டு ஏமாறக் கூடாது.

அனு: இதுவும் ஓர் அனுபவம்தான். மேலும் நாம் பல நாடுகள் கடக்க வேண்டியுள்ளது. வா! நடப்போம்!

அங்: ஆ! இது என்ன ஊர்?

அனு: இது தண்டகவனம். அதில் இது முண்டகத் துறை. இது பாண்டு மலை. இது அருந்ததிமலை. இதோ வந்துவிட்டோம். இதுதான் திருவேங்கடமலை. வாருங்கள் தொழுவோம். தொண்டைநாடு, சோழ நாடு, மலைநாடு, பாண்டியநாடு, ஆம் அத்தனையும் கடந்துவிட்டோம். தமிழ் இங்கே மணக்கிறது. அதோ பார் தமிழ் வாழ்க என்று கூக் குரல் இடுகின்றனர். இதுதான் மயேந்திரமலை. இனி யும் கடந்தால் கடல்தான், மலை இல்லை. ஆனால் மலைப்புத்தான் நிற்கிறது.

சாம்: தேடினோம்! தேடினோம்! தேடினோம்!

அங்: வாடினோம்! வாடினோம்! வாடினோம்! இனி ஓர் அடியும் நம்மால் வைக்கமுடியாது; எனக்கு என் னமோ தேவியைக் காணமுடியும் என்ற நம்பிக்கை விட்டுவிட்டது. திங்கள் எல்லையும் முடியப் போகிறது. இனி இராகவன் உயிரும் முடியப்

போகிறது. தேவியைக் காணாமல் திரும்பினால் என் தந்தை சுக்கிரீவரும் முனிவார். எம் தலைவன் இராமனும் சிந்தனை வருந்துவார். அச் செய்கையைக் காண நான் வாழேன். என் உயி ரினை மாய்ப்பேன். இது தான் செய்யத்தக்கது.

**அனு:** உயிரை மாய்ப்பதா! அது கோழைகளின் செயல். வாழ்ந்தால் வீரர்களாக வாழவேண்டும், வீழ்ந்தால் சடாயுபோல எதிர்த்து மாயவேண்டும். தேடுவோம், தேடிக்கொண்டே இருப்போம். அதே முயற்சியில் அழிய வேண்டின் சடாயுவைப்போல் அழிவோம். அதுதான் வீரமரணம்; கோழைதான் மரணத்தைப் பற்றிச் சிந்திப்பான்.

**சம்பாதி:** (புலம்பு நெஞ்சினனாகிக் குறுகி நடந்துவருகிறான்) என்ன சொன்னீர்கள்! என் தம்பி சடாயுவா இறந் தான். இராமனுக்குச் சேவை செய்தா இறந்தான். நான் அழுவதா? மகிழ்வதா? ஒரே தம்பி; அவனும் மாண்டான்; இராமன் சேவையில் மாண்டான் என்ற செய்தி என்னை ஆறுதல் கொள்ளச் செய் கிறது. நல்லது, தேவியைத் தேடும் முயற்சியில்....

**அனு:** நீர் ஏதாவது?

**சம்பாதி:** வழிகாட்ட முடியும். சீதையை அப் பாதகன் பற்றிப் போகின்ற பொழுது நான் நேரிற் கண் டேன். அவன் இதோ இந்தப் பக்கம்தான் போனான். இலங்கையில்தான் அவளைச் சிறைப் படுத்தியுள்ளான். நேரே அங்குப் போங்கள். நிச்சயமாக அவளைக் காணலாம்.

**அனு:** மிக்க நன்றி, ஐயா! பாதி வேலை முடிந்தது. இதோ இப்பொழுதே இக்கடலைக் கடந்து தேவியைக் காண்கின்றேன்.

**சம்பாதி:** உங்கள் முயற்சி வெல்க! அனுமன் ஆற்றல்

வளர்க; இராமன் நாமம் வாழ்க!

(அனுமன் நேரே கடலை நோக்குகிறான்.)

சாம்பவன்: என்ன! கடலைக் கண்டு.

அனு: கலங்கவில்லை. கடக்க விரைகின்றேன்.

சாம்: நாங்கள் இங்கேயே இருக்கின்றோம். உன்னைத் தவிர வேறு யாரும் கடக்க முடியாது. நாங்கள் கடலைத் தாவ முடியும்.

அங்கதன்: ஆனால், திரும்பி வரும் ஆற்றல் எங்களுக்கு இல்லை. நீர் மட்டும் போய் வாரும். நாங்கள் இங்கேயே நிற்கின்றோம்.

சாம்: வாழ்க அனுமன்! வெல்க அவன் திறம்! சூழ்க கடலை! ஆழ்க எம் துயர்! அழிக அரக்கர்!

அனு: இதோ மயேந்திரமலையின் உச்சிக்குப்போய் ஒரே தாவு.

சாம்: தாவி, இராமனின் ஆவி அனையாளைக் காண வேண்டும்.

அங்: பிறகுதான் எங்கள் ஆவியும் நிற்கும். வருக, போய் வருக!

## காட்சி:10

### சீதை, திரிசிடை, அனுமன்

(சீதை கண்களில் நீர் பொழிந்த வண்ணம் சோகத் தோடு அமர்ந்திருக்கின்றாள். அரக்கியர் ஒரு சிலர் வருவதும் போவதுமாகக் காட்சி அளிக் கின்றார்கள். பிறகு ஒரு பக்கம் சாய்கின்றார் கள். திரிசடை வருகின்றாள்)

திரிசடை: தேவி! இன்னும் உறங்காமல் விழித்துக் கொண்டா இருக்கின்றீர்!

**சீதை:** துயில் எனக் கண்கள் இமைத்ததும் இல்லை, முகிழ்த்ததும் இல்லை. புலிக்குழாத்தில் அகப்பட்ட மான் என்றாவது தூங்க முடியுமா?

**திரிசடை:** தூங்காமல் இப்படியே விழித்துக் கொண்டிருந் தால்,

**சீதை:** நான் என்ன செய்வது? அவர் நினைவு என் கண் களில் மிதந்து கொண்டே நிற்கின்றது. கரிய மேக மும் அஞ்சனமும் கண்டால் அவர் திரு உருவம் உடனே பளிச்சென்று தென்படுகிறது. விதி வலி கடத்தல் அரிதென்று வானையும் மண்ணையும் நோக்கி அவர் வருவார் வருவார் என்று காத்து நிற்கின்றேன். நிச்சயமாக அவர் வருவார் என்ற நம்பிக்கை எனக்கு உறுதிபடுகிறது.

**திரிசடை:** என்ன அக்கா ஏதாவது கனவு கண்டீர்களா?

**சீதை:** என் இடம் துடிக்கின்றது. ஏதோ நன்மை வரக் காத்துக் கிடக்கின்றது. இடம் துடித்தால் எப் போதும் எனக்கு நன்மை உண்டாகும்.

**திரிசடை:** எனக்கும் ஓர் இனிய கனவு உண்டாயிற்று. இரா வணன் அழிவதும் நீ விடுதலை பெறுவதும் போன்ற ஒரு கனவு கண்டேன். அதோ மென்னி றத் தும்பி உன் செவியில் வந்து ஊதிப் போகின்றது. இவற்றை ஆராய்ந்தால் உன் ஆவி நாயகன் ஏவிய தூது வந்து எதிர்வான் என்று எண்ணுகின்றேன். அதோ யாரோ வருவதுபோல் தோன்றுகிறது.

(அனுமன் மறைந்து நின்று காண்கின்றான்)

**அனுமன்:** ஆம்! இவள் தேவியே! வேறு யாரும் இல்லை. அறம் அழியவில்லை. நானும் இனி அழியத் தேவையில்லை. தேடினேன், கண்டேன். தேவியே

இவள்! (ஒளிந்து நிற்கிறான்.)

திரிசடை: யாரோ வந்தது போன்ற காட்சி தெரிந்ததே.

சீதை: யார்? இராவணன் நிழலாக இருக்கும்,

திரிசடை: அப்படியானால் நான் வருகிறேன். (மறுபடியும் அரக்கியர் அவளைச் சுற்றி நிற்கின்றனர்.)

**அனுமன் தனிக்காட்சி**

ஆகா, ஒளிபெற்ற திங்களைப்போல் இவள் தேய்ந்துள்ளாள்.

இவள் கற்பும் காவலும் பழிப்புப் பெற வில்லை. இவள் தோற்றம் இவள் ஏற்றத்தை உணர்த்துகிறது. இவள் நிலையில் நான் இப்பொ ழுது எதனைப் புகழ்வேன்! இராகவன் தோளையா! சீதையின் உள்ளப் பண்பையா! இவளைப் பெற்ற சனகன் குலத்தையா! கற்பினுக்கு அரசியாம் இவ ளைப் பெற்ற தந்தையும் உயர்ந்தான்; இராமனும் பெருமை எய்தினான். பெண் என்றால் இவள் அல்லவா பெண்! தவம் என்றால் இதுவல்லவா தவம்! நல்லறத்தின் மாண்பெல்லாம் பெண்குலத் திற்கே இவள் தந்துவிட்டாள். இவளால் பெண் குலம் உயர்ந்துவிட்டது.

இவளைத் தருமம்தான் காத்ததோ! சனகன் நல்வினைக் கருமமே காத்ததோ! கற்பின் காவலோ! அருமையே அருமை. இவள் பெருமையே பெருமை, செல்வமும், செழிப்பும், தீமையும், கொடு மையும், நிறைந்த சூழலில் இவள் நல்லறம் காத்து நிற்கின்றாள். இது அறத்தின் வெற்றி என்றே கூறு வேன். வெல்லுமோ தீவினை அறத்தை மெய்ம்மை யால்! அறம் வெல்லும்; பாவம் தோற்கும். அதோ யாரோ வருகிறார்களே. தலை கனத்து இருக்கிறது.

இவன் இராவணனாகத்தான் இருப்பான். நின்று கவனிப்போம். இவன் தேவியை! சே! முடியாது; ஒல்லாது; இவன் செயல் அங்குச் செல்லாது.

## காட்சி: 11

### சீதை இராவணன்

*(சீதை நிலம் நோக்கி நிற்கின்றாள். அவனை ஏறெடுத்துப் பார்க்கவில்லை.)*

**இராவணன்:** இன்று என்பது இறந்தது; நாளை என்பதும் நகர்கிறது. என்றுதான் நீ இசைவாய்! என்னைக் கொன்று இறந்தபின் நீ கூடுதியோ என்னை!

திலகமே! உலகமே என் திருவடியில் கிடக்கிறது. நான் உன், சேவடியில் கிடக்கின்றேன். அநங்கன் என்னைப் படுத்தும்பாடு நீ அறிந்திலையோ! என்னையும் அவன் அங்கம் அற்றவனாக ஆக்கத் துளைக்கின்றான்.

பூந்தண் வார்குழற் பொற் கொழுந்தே! காடு கடந்து திரியும் மானுடர் வாழ்வு ஒரு வாழ்வாகுமா! மானுடரை மதித்து அவர்களையே எண்ணி வாழும் நீ?

**சீதை:** நான் மனிதப் பிறவிதான். நீ மனிதனாக நடந்து கொள்ளவில்லையே என்பதற்கு வருந்துகிறேன். நீயும் ஒரு வீரனா! அஞ்சினாய் ஆதலால்தான் வஞ்சனை மானை ஏவி மாயையால் மறைந்துவந்தாய்! எம் கோமகன் வந்தால் உன் தலை உருளும், அப்பொழுதுதான் மானுடம் வென்றதா இல்லையா என்பதை உணர்வாய். இந்த இடத்தை விட்டுப் போ! உன்னை எரித்து ஒழிப்பேன். ஆனால், என்

கணவன் வீரத்திற்குப் பழுது விளைவிக்கக் கூடாது என்றுதான் பார்க்கின்றேன்.

**இராவணன்:** நானும் உன்னை வலிய; இல்லை, அது இராவணன் செய்யமாட்டான். அவன் உன் உடலை விரும்பவில்லை; உள்ளத்தையும் விரும்புகிறான்.

**சீதை:** கள்ளனுக்கும் உள்ளமா? அஞ்சி அகன்று விடு.

**இரா:** உன் சினமும் உன் அழகைச் சிறப்பிக்கிறது. நாளை கட்டாயம் நீ மனம் மாறவேண்டும். இன்னும் ஒரு நாள் தவணை தருகிறேன். அதற்குள் ஒரு முடிவு.

**சீதை:** இல்லாவிட்டால் என்ன செய்வாய். என் உயிர் தானே போகும்; போகட்டுமே.

**இரா:** உன் உயிர் போனால் உடனே என் உயிர் போய் விடுமே. அதனால்தான் நான் உன்னை வற்புறுத்த முடியாமல் இருக்கின்றேன்.

**சீதை:** கோழை நீ; உயர்ந்த தத்துவங்களைப் பேசுகின்றாய். மறைந்து வந்து மாயம் விளைவித்தாய். நீயும் ஒரு வீரனா!

**இரா:** இப்பொழுது சொல்லுகிறேன், இரகசியத்தைக் கேள். அவர்களை நேரில் எதிர்த்தால் அவர்கள் உன்முன் இறந்து விடுவார்கள். உடனே நீயும் உடன் உயிர்விடுவாய். அதற்காகத்தான் உன்னை மட்டும் கொண்டு வந்தேன். அவர்களைக் கொல்லாமல் விடுத்தேன்.

மறுக்காதே! என்னை என்ன வேண்டுமானாலும் சொல். உன் வாயால் என்னை வீரமற்றவன் என்று மட்டும் பேசாதே. வீரமுள்ள இடத்தில்தான் காதல் உண்டு; காதல்; காதல் போயிற் சாதல் மிஞ்சும்.

**சீதை:** ஆம்; காதல் போயிற் சாதல்தான் மிஞ்சும். நானும்

அதே உண்மையைத்தான் கூறுகின்றேன்.

## காட்சி: 12

### சீதை, அனுமன்

***சீதை:*** பொறுமைக்கும் ஓர் எல்லை உண்டு; சீதை பொறுத்தாள் என்ற பெயர் போதும். இனி அவள் வெறுத்தாள் உயிர். இது உலகறியட்டும். ஏ மாதவிக் கொடியே, என் உயிரைப் போக்கு; இதோ இரையாகின்றேன்.

***அனுமன்:*** பொறுமைக்குப் பெருமை தேடித்தரும் தேவியே! இராமனின் ஆவியே! இதோ நான் இராம தூதன்; இனி இங்குக் காலதூதனுக்கு வேலை இல்லை.

***சீதை:*** இராமன்! இராம தூதன்!

***அனுமன்:*** ஆம் இராம தூதன்தான் நான். என்னை அவர் சொல்லின் செல்வன் என்றே அழைப்பார். அவர் சொல்லின் நான் எங்கும் செல்வேன். உங்களிடம் அவர் ஆணையால்தான் வந்திருக்கிறேன்.

***சீதை:*** சொல்லின் செல்வன், உன் சொல் உண்மையில் உயரிய செல்வம்தான்! என் உயிரை நிறுத்திய செல்வம் உன் சொல்!

***அனுமன்:*** அன்னையே! சொற்செல்வம் மட்டுமல்ல; பொருட் செல்வமும் தாங்கி வந்துள்ளேன். இப் பொழுதேனும் என்னை நீங்கள் நம்பலாம்.

***சீதை:*** இராமன் என்ற பெயரைச் சொன்னதால் நீ சொல்வது என்னை உருக்குகிறது. நீ அரக்கனே யாகுக! வேறோர் அமரனே யாகுக! அன்றிக் குரங்கு இனத்து ஒருவனேயாகுக! இரக்கமேயாக

வந்திங்கு எம்பிரான் நாமஞ் சொல்லி உருக்கி என் உணர்வைத் தந்தாய். இறக்கத்துணிந்த எனக்கு உயிரைத் தந்தாய். இதனின். உதவி வேறு உண்டோ! வாழி நீ!

**அனு:** ஆழிசூழ் உலகம் ஆளும் அண்ணலின் தூதுவன் நான்; வானரத் தலைவனின் அமைச்சன் நான். அண்ணல் இராமனின் ஏவலில் உம்மைத் தேடியே இங்கு வந்தேன்.

**சீதை:** இன்னும் சிறிது பொறுத்திருந்தால் இதோ இந்த மாதவிக்கொடி தன் கொடுமையைச் செய்திருக்கும்.

**அனு:** விளக்கம் தேவையில்லை. அண்ணல் நீர் இருக்கும் இடம் தெரியாமையே தவிர, மீட்க அறியாமை அன்று...அவர் உயிர் நீங்கள். அதனால்தான் அவர் தம் உயிரைப் போக்க முடியாமல் அங்கே நிற்கின்றார். அவர் உடலை அங்குக் கண்டேன்; உயிரை இங்குக் காண்கின்றேன். நீர் இருக்கும் இடம் தேடும் முயற்சியில்தான் எம் இறைவன் காலம் தாழ்த்தினன்.

**சீதை:** பின், எப்படித்தான் என்னைக் கண்டுபிடித்தீர்கள்?

**அனு:** அன்னாய்! நீர் அன்று கீழே போட்ட அணிகள் தாம் உம் மங்கல அணியைக் காத்தன.

நீர் சிந்திய நகைகள் உம் கண்ணீரை நிறுத் துகின்றன. இந்த அணிகலன்களைக் கொண்டுதான் நீர் தென்திசை ஏகி இருக்கவேண்டும் என்று அறிந்தோம். அண்ணல் இராமன் சொல்லிய அடையாளங்களைக் கொண்டுதான் உங்களை அறிந்தேன். இந்தக் கணையாழியையும் அவரே என க்குத் தந்தார். ஆழியையும், மாயையால் அரக்கர் செய்கையால் கொண்டு வந்தேன் என்று எண்ண

லாம். மற்றும் சில அடையாளங்கள் சொல்கிறேன். அதற்குப் பிறகு நீங்கள் அதனைப் பெற்று அறியலாம்.

**சீதை:** எல்லாம் வியப்பாக இருக்கிறது! நீர் சொல்லுவது அவ்வளவும் உண்மையாக இருந்தால், இழந்த மணி யைப் பெற்ற நாகம் போன்று ஒளி பெற்றவளா வேன் பழந்தனம் மீண்டும் படைத்த பழமையோர் போல் ஆவேன். குழந்தையை உயிர்த்த மலடிக்கு உவமையாவேன்; ஏன்? இன்னும் சொல்லப் போனால் விழிபெற்ற குருடனும் ஆவேன்? எங்கே அந்த ஒளி? காட்டுக அதனை.

**அனு:** அன்னையே! அடுத்து அவர் அடவி செல்ல நின் றார். அப்பொழுது விட்டுச் செல்வதற்காக உடுத்த ஒரு துகிலோடும் கடுத்த முகத்தோடும் உடன் புறப்பட்ட செய்தி உண்மைதானே! அதனை நினைவுபடுத்திச் சொல்ல இசைத்தார்.

ஆண்ட நகரைவிட்டு நீண்ட தூரம் செல்லு முன்பே எங்கே காடு என்ற உங்கள் கேள்வி அவருக்குப் புன்முறுவல் ஊட்டவில்லையா?

சுமந்திரனிடம் கடைசி செய்தியாக உம் தங்கையருக்குச் சொல்லிய செய்தி இதுதானே: கிள்ளையொடு பூவைகட்குக் கிளவிகள் கிளத்துக; அவற்றைப் போற்றுக என்ற செய்தியைச் சொல்ல வில்லையா? மீட்டும் உரை வேண்டுவன இல்லை என்று நினைக்கிறேன். இதோ! இந்தக் கணை யாழியை இனியேனும் பெற்றுக் கொள்ளுங்கள்.

**சீதை:** இறந்தவர் மீண்டும் பிறந்த பயன் எய்தினேன் நான். மறந்தவர் மீண்டும் உணர்வு வந்தவர்போல் ஆயினேன் நான்.

*(அதனை வாங்கி மார்பிலும் தலையிலும் வைத்து மலர்க் கண்களில் ஒற்றிக் கொள்கிறாள். மறுபடியும் அதனை எடுத்து நோக்குகின்றாள். கண் களில் நீர் பட்டு அதனை நீள நோக்குகின்றாள்)*

*இது மணியா! அன்று; என் கண்; இல்லை; வாழ்வின் ஒளி.*

*(மீண்டும் அனுமனை நோக்குகின்றாள்.)* *உலகம் தந்த முதல்வன் தூதாய் வந்தாய்; என் உயிர் தந்தாய். உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன். எனக்குத் தாய். தந்தையும் நீயே! அருளின் வாழ்வே! இம்மையும் மறுமையும் எனக்கு நல்கினாய். இருமையிலும் இனிமையை எனக்குத் தந்தாய்.*

*பகைவர் அஞ்சும் பண்புடைய வீர! துணை யிலேன் பரிவு தீர்த்த வள்ளலே! உன்னை என்ன வென்று கூறி வாழ்த்துவேன். சொல்லின் செல்வமே! உலகம் ஏழும் வீழ்வுற்ற ஞான்றும் பல்லாண்டு நீ வாழவேண்டும். இதுதான் என் வாழ்த்துகள். இதற்குமேல் என்னால் சொல்ல இயலவில்லை என் பதால் ஒன்றும் கூறாமல் இருக்கிறேன். சொல்லின் செல்வரே! மேலும் நீர் சில சொல்ல விழைகின் றேன். எம் தலைவர் எப்படி இருக்கின்றார்? அவர் நலம்பற்றிப் புலம்பும் எனக்கு ஏதாவது சொல்ல வேண்டுகிறேன்.*

அனு: *அன்னையே! நான் எதனைச் சொல்லுவேன். பொன்மானின் பின்னால் அவர் மயங்கிச் சென்ற கதையைச் சொல்லவா? கட்டிவைத்த பன்னகசா லையில் வந்து நின்று உங்கள் திருவடிவு காணா மல் ஏங்கிய அதனைச் சொல்லவா? அன்றி உம் மைத் தேடித்தேடி இறுதியில் சடாயுவால் இரா*

வணன் உம்மை எடுத்துச் சென்ற அவலச் செய்தியை அறிந்ததைச் சொல்லவா? வாலியைக் கொன்று எங்கள் நட்பைப் பெற்று எங்களுக்குத் தலைமை ஏற்று என்னைத் தூது அனுப்பிய வித த்தைச் சொல்லவா? அன்றி உம்மையே எண்ணி எண்ணி அவர் விடும் சோகக் கண்ணீரின் வெம்மையை அளந்து கூறவா! எதைச் சொல்வது நான்?

சீதை: இவற்றை எல்லாம் கேட்கும்பொழுது ஒருபக்கம் உவகை மற்றொரு பக்கம் சோகம். இந்த இரண்டு உணர்வுகளுக்கு இடையே நான் இப்பொழுது மிதக்கின்றேன். அன்பின் இம்மொழி கேட்டு எம் தலைவரின் நெஞ்சினில் வருத்தம் உன்னுகின்றேன்; என்புற உருகி நிற்கின்றேன்; ஏங்குகின்றேன்; துன்பமும் உவகையும் சுமந்த உள்ளத்தவளாக நிற்கின்றேன்; இரண்டுவகை உணர்வில் மிதக்கின்றேன்.

அனு: தாயே! எனக்கு விடைநல்க வேண்டுகின்றேன். உங்களை என் தோள்மேல் ஏற்றி இராமன்பால் சேர்க்க உங்கள் ஆணையை வேண்டி நிற்கின்றேன்.

சீதை: அறிஞ! சொல்லின் செல்வ! அறிவும் ஆற்றலும் நிறைந்த அன்ப! பண்பு மறந்து நீ பேசுவதற்கு மிகவும் வருந்துகிறேன். இராவணனுக்கும் உனக்கும் இச் செய்கையில் என்ன வேறுபாடு இருக்கிறது? அவனும் கள்ளத்தனமாக என்னைக் களவாடினான். நீயும் அதே செய்கையை எண்ணுகின்றாய்.

நீ ஆண்மகன் என்பதை மறந்து பேசுகிறாயே! உன் தோளில் நான் அமாவதா? பண் பிழந்து பேசி விட்டாய். நீ உடன்பிறந்த பாசத்தோடு பேசலாம். ஆனால், என் பெண்மனம் அதை எண்ணிப்பார்க்கவே நாணுகின்றது. உன்னை நம்பி நான் வந்து விட்டால் என் தலைவனின் ஆற்ற

லில் நான் நம்பிக்கை இழந்தவளாகின்றேன். உன் கருத்துக்கு நன்றி. அதை மறுப்பதைவிட வேறு ஒன்றும் எனக்குத் தெரியவில்லை. நான் மட்டும் தப்பிவந்தால் போதுமா? அறம் வாழ வேண்டாமா? இன்னல் இழைத்த இராவணனைப் பின்னப் படுத்தவேண்டாமா? இழிவைப் படைத்த அவனைப் பழி வாங்க வேண்டாமா? நீ கடமை மறந்து பேசுகின்றாய்; நீ சொல்லின் செல்வன்; ஆனால், பண்பின் செல்வமும் அச்சொல்லில் பயின்று இருக்க வேண்டும். இதுவே என் பணிவான மொழி.

**அனு:** அன்னையே, மன்னிக்க வேண்டுகிறேன்! ஆர்வத்தால் அறிவு மறந்து பேசிவிட்டேன். அண்ணலைக் காண்பேன்; விரைவில் உங்களைச் சிறை மீட்போம். இது உறுதி.

**சீதை:** இன்னும் ஈண்டு ஒரு திங்கள் மட்டும்தான் இருப்பேன். பின்னை யான் உயிரோடு வாழேன். இது மன்னனின் ஆணை! மனத்தில் கொள் நீ. இந்தச் செய்தியை அம்மன்னவர்க்கு எடுத்துரை நீ. ஆரம் தாழ் மார்பனுக்கு அமைந்ததோர் தாரம் நான். அது அல்ல என்று கருதினாலும் தயா என்னும் ஈரம் வேண்டு; அதுவும் இல்லை என்றாலும், தன் வீரங்காத்தல் வேண்டும் என்று நீ வேண்டுவாய்.

இலக்குவனுக்கும் ஈதொரு வார்த்தை சொல்லுதி. மன்னனின் அருளால் என்னைக் காத்திருந்த அவருக்கே என்னைச் சிறையினின்று மீட்பதும் கடமை என்று விளம்புவாய்.

திங்கள் ஒன்றில் என் செய்தவம் தீரும். பின்னை நான் வாழும் ஆற்றல் இல்லை எனக்கு. அதற்குள் அவர் இங்கு வரவில்லை என்றால், அல்லது வர இயலவில்லை என்றால், கங்கை

யாற்றங் கரையிலேயே அடியேனுக்குத் தன் செங்கையாற் கடன் செய்க என்று செப்புவாய்.

அரசு வீற்றிருந்து ஆளவும், புரசை யானை யில் வீதியிற் போகவும், விரசு கோலங்கள் காண வும் விதியிலேன்; இன்னும் உரைசெய்து என்ன பயன்? எல்லாம் என் ஊழ்வினை; எல்லாம் என் ஊழ்வினை; இராமனை நோக்கி அயோத்தி காத்துக்கொண்டிருக்கிறது. அன்னை நோய்க்கும் பரதன் அங்கு ஆற்றுறும் இன்னல் நோய்க்கும் அங்கு ஏகுவது அன்றி, என்னை நோக்கி இங்கு எங்ஙனம் வர இயலும்?

எந்தையர் சனகர் முதலினர் கிளைஞர் யாவர்க்கும் என் வந்தனை விளம்புதி. உங்கள் தலை வன் கவியின் மன்னனை, சுக்கிரீவனை ஒன்று வேண்டுதி. சுந்தரத் தோளனாகிய இராமனை விடா மல் தொடர்ந்து காத்துப்போய் அயோத்தி நகருக்கு அவனை அரசனாக்கு என்பாய். இது என் வேண்டுகோள்.

**அனு:** அன்னை! நீர் விளம்புவதும் அத்துணையும் இய ம்புவதற்கு இல்லை; அவை நடவாதன; நீரும் வீழ் வீர்! இராவணனும் வாழ்வான். இராமனும் அயோத்தி புகுவான் இதெல்லாம் வீண் கற்பனை; வீண் பிதற்றல்; கற்பின் ஓவியத்தைச் சிறைப்படுத் திய அவ்வற்பன் உயிரோடு வாழ்வதா? அது ஒருக்காலும் நடக்காது. ஈண்டு ஒரு திங்கள் நீர் இடரின் வைகவும் வேண்டுவதில்லை. யான் விரைவில் வீரனைக் காண்பதே குறைவு. பின் காலம் வேண்டுமோ! ஆண்டகை இனியொரு பொழுதும் ஆற்றுமோ: ஒருக்காலும் ஆற்றார்.

அவர் துன்பத்தை நீர் உணராமல் பேசு

கின்றீர். ஆவி உண்டு என்னுஞ்சொல் உண்டே தவிர, அவர் உண்மையில் நடைபிணமாகத்தான் வாழ்கின்றார், சோகம் வந்துறுவது தெளிவு பெற்றால்தானே! மேகம் வந்திடித்தாலும், இடி ஏறு வந்து அடுத்தாலும், ஆகமும் புயங்களும் அழுந்த ஐந்தலைநாகம் வந்து அடர்த்தாலும் அவர் உணர்வு தோன்றுவதே இல்லை.

மத்துறு தயிர் எனத் தத்துறும் உயிரொடு புலன்கள் தள்ளுறப் பித்தனாய் வாழ்கின்றார். உம்மைப் பிரிந்த வேதனை எத்தனை உள்ளன? அவை எண்ணும் அளவுக்கு அடங்குமோ!

இந்நிலை உடையவர் பொறுக்கும் என்று எண்ணுவது பொருந்தாது. யான் புகன்ற யாவும் உள்ளங்கை நெல்லியம் கனியிற் காட்டுவேன். மெய்ந்நிலை ஈது. இதனை உணர்ந்து எனக்கு விடை தந்து உதவ வேண்டுவேன்.

*சீதை:* செல்லுதி ஐய, விரைந்து! தீயவை யாவும் வேறு இனி ஒன்றும் விளம்பேன். முன் சில அடையாளங்களை நான் கூறுகின்றேன். இதனை மட்டும் அவருக்கு உணர்த்தினால் போதும்.

*அனு:* அவை தாங்கள் அளிக்கும் சொற் செல்வமாகக் கருதித் தாங்கிச் செல்வேன். அருளுக.

*சீதை:* பல சொல்வதைவிட ஒரு சில மட்டும் சொல்கிறேன். இதை நினைவில் நிறுத்தி எடுத்துச்சொல்.

என்னொரு இன்னுயிர் மென்கிளிக்கு யார் பெயர் இடுவது மன்னா என்று கேட்டேன், அதற்கு...

இராமன் குரல்: மாசறு கேகயன்மாது என் அன்னை தன் பெயர் வைக்க

**சீதை:** என்று அன்பினோடு சொன்ன மெய்ம்மொழியை மட்டும் சொல்லுதி. அதுவே போதும். மற்றும்—

**இராமன் குரல் :** இந்த இப்பிறவியில் இரு மாதரைச் சிந்தையா லும் தொடேன்

**சீதை:** என்று அவர் அளித்த செவ்வரத்தையும் நினைவு படுத்து. இந்த இரண்டும் அன்னைபால் கொண்டி ருந்த அன்பையும், என்பால் கொண்டிருந்த உறவை யும் உணர்த்தும். கணையாழி நீ கொண்டுவந்து கொடுத்தாய். நானும் ஒரு மணியாழி தருகின்றேன். தலையில் அணியும் இச்சூடாமணியை என் துகிலில் முடித்து வைத்திருக்கின்றேன். அதனை நான் தந்த அடையாளமாகக் கொடு. அவர் என் தலையில் சூடிய அம்மணி, இப்பொழுது சூடாமணியாக இருக்கிறது.

(அனுமன் வாங்குகிறான். அதனை வாங்கி வியக்கின்றான்.)

**அனு:** வருகிறேன். இன்னும் என் பணி தொடர்கிறது. அதனைச் சொல்லாமல் செய்வதுதான். நல்லது. ஈண்டு இப்பொழிலை அழித்து அரக்கர்களைக் கொன்று இராவணனை எதிர்த்துப் போவேன்; அப்பொழுது தான் இந்த அரக்கர்கள் எம் ஆற்றலை உணர்வர்; இராமனைக் கண்டு அஞ்சுவர். வருகிறேன்.

## காட்சி:13

(இராவணன் பேரவை. அவன் முன்னும் பின்னும் சீற்றத் தோடு நடக்கின்றான்.)

**இராவணன்:** எங்கே அந்த வானரப்பயலைப் பிடித்து இழுத்து வந்தீர்களா?

**அரக்கன்:** அதோ கட்டிப்பிடித்து வருகிறார்கள்; இந்திர சித்து தன் பாசத்தால்தான் அவனைக் கட்ட முடிந்தது.

**இராவ:** என்ன அக்கிரமம்? பொழிலை எல்லாம் அழித் தான். கிங்கரரை வதைத்தான். சம்புமாலியைச் சிதை த்தான். பஞ்ச சேனாதிபதிகளைப் பகைத்தான். என் மகன் அக்கமரனை அழித்தான். இந்திரசித்து போய் இருக்கின்றான். அவன் சித்து இவனிடம் ஒன்றும் பலிக்காது.

(அனுமனைக் கயிற்றால் கட்டிப்பிடித்து வருகிறார்கள்)

**இராவ:** நன்று, நன்று. வந்தாயா! இனித் தப்பித்துக் கொள்ள முடியாது.

**அனு:** என்று உன்னைக் காண்பது என்று காத்து நின்றேன். நீயும் என் பார்வையினின்று தப்ப முடியாது. நீதானா இராவணன்? பத்துத் தலை இருக்கும் என்று சொன்னார்களே!

**இராவ:** பத்து தலை இல்லை எனக்குப் பற்றுதலை உண்டு. நீ இப்பொழுது அஞ்சுதலைப் பெற்றாய். இங்கு உனக்கு ஆறுதலை இல்லை.

**அனு:** வெறும் தறுதலையாகப் பேசுகின்றீரே, நான் கேட் டதற்கு மறுதலை அளிக்காமல். என்னைக் கட்டி விட்டதாகக் கருதுகின்றீர். கட்டுண்டேன்; காலம் வரும். உன்னைப் பார்த்துப் பேசவேண்டும் என்று

தான் கட்டுண்டேன்; மேலும் உம் ஊரையும், ஊர் மக்களையும் கண்டு போகவேண்டும் என்னும் ஆவல் உண்டு. நீரே ஊரெல்லாம் இழுத்துச் சென்று ஊரில் எல்லாப் பகுதிகளையும் காட்டினீர். அவர்களையும் ஒருசேரத் தெருவில் கொண்டு வந்து நிறுத்தினீர். இலங்கையைப் பார்த்துவிட்டேன்; மிக்க நன்றி. ஆரவாரத்தோடு நீங்கள் என்னை வரவேற்று ஊர்வலம் நடத்தினீர்கள்.

இராவ: பேசக் கற்றிருக்கிறாய்! மிக்க திறமைசாலி.

அனு: அதனால்தான் என்னைத் தூதுவனாக அனுப்பி யிருக்கிறார்கள்.

இராவ: நீ யார்? இதுவரையிலும் நான் காணாத ஒரு வனாகக் காண்கின்றாயே! நீ வந்த காரியம் யாது? பிறர் உன்னை அனுப்பினார்களா? நீ என்ன சிவனா! அயனா! அன்றி எமனா!

அனு: நீ கூறிய யாரும் இல்லை. இராம தூதன் நான்; இலங்கை வந்துள்ளேன். அந்த இராமன் யார் என்று கேள், சொல்கிறேன். முனிவரும் அமரரும், மூவர் தேவரும், மற்று யாவரும் முடிக்க முடியாத செயலை முடிக்கப் பிறந்துள்ளான். அறம் தலை நிறுத்தி மறத்தை ஒழித்துத் தீயவரை ஒறுத்து, நல் லோரை வாழவைக்கத் திருமாலே இராமனாகப் பிறந்துள்ளான்.

இராவ: ஆகா! பிரமாதம். இதை வைத்துக்கொண்டு நீ அழ காகச் சொற்பொழிவு செய்யலாம்.

அனு: அன்னவனுக்கு அடிமை செய்வேன். நாமமும் அனு மன் என்பார்கள். தேவியைத் தேடி நாற் பெரும் திசையும் போந்த மன்னரில் தென்பால் வந்த சேனைக்குத் தலைவன் அங்கதன்; மன்னவன் வாலி மகன். அவன் தலைமையில்தான் இங்கே தூதுவ னாகத் தனியே வந்துள்ளேன்.

இராவ: வாலி மகன் அங்கதன் அனுப்பிய தூதுவனா! வாலி வலியவனாக இருக்கிறானா? அவன் அரச வாழ்க்கை....

அனு: நன்று. நன்று. வாலியின் வாலும் ஆட்சியும் எப்பொழுதோ ஒழிந்து விட்டன. இராமன் அவன் வலிமையை எப்பொழுதோ வீழ்த்திவிட்டான்.

இராவ: வாலியை இராமன் வீழ்த்திவிட்டானா!

அனு: தெரிகிறதா இப்பொழுதாவது, எங்கள் இராமனின் ஆற்றல், அவனைப் போற்றி நீ வாழ்ந்தால், இரா வணனாக வாழலாம், இல்லாவிட்டால் இரா அண் ணனாக மறையலாம்.

இராவ: என்ன! அண்ணனைக் கொன்ற பகைவனிடமா சுக் கிரீவன் சரண் புகுந்தான். அண்ணனைக் கொன்ற வனுக்கு அடிமையாகின்றான் உங்கள் சுக்கிரீவன். அவனுக்கு நீ வாலைப் பிடிக்கின்றாய். அவனுக்குத் தூதுவன என்று சொல்லிக்கொள்ள நீ வெட்கப்ப டவில்லையா!

அனு: வாலி அழிந்த வரலாறு உனக்குப் பாடமாக அமைய வேண்டும். அண்ணனாக இருந்தால் தன் தம்பியின் மனைவியைத் தாரமாகக் கொள்வானா! மனத் தாலும் கருதலாமா? அப்படிக் கருதிய அவனை மீண்டும் அண்ணன் என்று கூறுவது எவ்வாறு பொருந்தும். அப்பொழுதே அவன் உறவு அற்று விட்டது என்பதை அறிய உன் பகுத்தறிவு ஏன் வேலை செய்யவில்லை. உடன் பிறந்தால் மட்டும் போதுமா? அண்ணன் என்ற தகுதியும் வேண்டாமா?

இராவ: பகுத்தறிவோடுதான் பேசுகின்றேன். மாற்றான் மனை வியை இச்சித்தான் என்பதற்காக அவனைக் கொல் வதா? தன் மனைவியை இழந்து நிற்கின்ற

இராமனுக்கு மானம் ஒரு கேடா! அவனால் என்னை ஒன்றும் செய்ய முடியவில்லை. வேறு ஓர் வம்பை விலைக்கு வாங்கி இருக்கின்றான்.

**அனு:** நா அடக்கிப் பேசு. வாலியின் கதியே அப்படி என்றால்; நினைத்துப் பாரும். தையலை விட்டு அவன் சரணம் தாழ்ந்து மன்னிப்புக் கேள். இது தான் வழி.

**இரவா:** விளக்கம் கேட்கவில்லை. நீ என்னை விட்டுத் தப்ப முடியாது. சோலையை அழித்தாய். எம் சேனையை ஒழித்தாய். நீ அழித்த அழிவுக்கு உன்னைக் கொன்று ஒழித்தால் தவிர வேறு வழி இல்லை. யாரடா அங்கே!.

**வீடணன்:** அண்ணா! மாதரைக் கொன்றவரையும் உலகம் மன்னிக்கும்; தூதுவரைக் கொன்றால் அரசியல் பழிக்கும் நம் தங்கை இளையவள் காமவல்லியை அவர்கள் கொலை செய்யவில்லையே. மன்னித்து விடவில்லையா! பெண் கொலை கூடாது என்பதனால்தானே. தூதுவரைக் கொல்லுவதும் தகாது.

மேலும் இவனைத் தொலைத்துவிட்டால் யார் அவர்களுக்கு நம் பெருமையைப் பற்றிச் சரியாக விளக்கமுடியம். நம் செயலையும் ஆற்றலையும் அவர்கள் உணர முடியாதே.

**இராவ:** நல்லது! அதுவும் சரி. இவனைக் கொல்லாமல் நெருப்பிட்டுச் சுட்டு அவமானப்படுத்தி. அனுப்புங்கள், இழுத்துப் போங்கள். இராவணனின் பெருமையை இவன் போய்ச் சொல்லட்டும் அங்கே!

(அனுமனை இழுத்துச் செல்லுகின்றனர்.)

## காட்சி : 14

### அங்கதன், சாம்பவன்

*அங்கதன்:* அனுமன் இன்னும் வரவில்லையே.

*சாம்பவன்:* அதோ பார் வானம் சிவந்திருக்கிறது. இது மாலைப்பொழுது இல்லையே.

*அங்:* வானத்தைச் சினக்க வைத்தவன் அனுமன்தான்; வானமும் சிவந்து காணப்படுகிறது.

*சாம்:* தென்திசை இலங்கையின்றுதான் இச்சிவப்புத் தோன்றியிருக்க வேண்டும்.

*அங்:* சிவப்பு மட்டும் அல்ல. கருப்பும் கலந்திருக்கிறது.

*சாம்:* மங்கிய புகை எங்கும். எழுந்து வருகிறது.

*அங்:* இலங்கை எரிகிறது என்று எண்ணுகிறேன்.

(அனுமன் வருகின்றான்)

*அனு:* இதோ வந்து விட்டேன்.

(அங்கதனையும் சாம்பவனையும் கை தொழுது வணங்குகிறான்.)

*அனுமன்:* இராமனின் நிறத்தையும், சினத்தையும்தான் புகையிலும், நெருப்பிலும் புகைத்து வந்தேன். அண்டர் நாயகன் தேவி உங்களுக்கெல்லாம் ஆசி வழங்கினாள். நன்மை கூறினாள்.

*அங்:* நடந்தது; என்ன? உன் வெற்றிச் செயல்கள் உன் நெற்றிவடுக்களே சொல்லுகின்றன. உன் மார்பின் வெட்டுகள் உன் புகழை எட்டுத்திக்கிலும் பரப்புகின்றன. கரங்களின் தழும்புகள் அவர்கள் மார்புகளைச் சுவை பார்த்து நிற்கின்றன. உன் வெற்றியைப் பற்றி உன் நாகூறவேண்டிய நிலையில்

இல்லை.

**அனு:** நா கூறும் நிலையில் இல்லை. அன்னையின் அருந்தவத்தை என் நா கூறும் நிலையில் இல்லை. அவர்கள் அளித்த ஒளிமிக்க சூடாமணியைக் கொண்டு வந்துள்ளேன்.

**அங்:** யாதும் இனி வேறு எண்ண வேண்டியது இல்லை. அண்ணலின் தேவி தன்னைக் கண்டது விரைவிற் செப்பி அவ்வண்ணல் அருந்துயர் அகற்றலே நாம் செய்யத் தக்கது.

**சாம்:** வாழ்க அனுமன்! வெல்க இராமன்!

## காட்சி : 15

(தென்திசை நோக்கித் தலைமீது வணங்கிய கையினனாக அனுமன் உள்ளே நுழைகிறான்)

**இராமன்:** வணங்கிய கையனாய் வருகின்றான். இணங்கிய செய்தியே கொண்டு வந்திருப்பான்.

சொல்லின் செல்வன்! சொல்லாமல் நிற்கின்றாயே! நீ அவளைக் கண்டதும் உண்டு. அவள் தொழுத் தக்க கற்பினாள் என்பதையும் உணர்த்துகிறாய்.

(அனுமன் மீண்டும் தென்திசை நோக்கித் தொழு கின்றான். பேச்சு இல்லாமல் அப்படியே கண்களில் நீர் அரும்ப மகிழ்ச்சி தெரிவிக்கின்றான்)

**இரா:** பேசு! சீதையைக் கண்டாயா?

**அனு:** இல்லை. தேவியைக் காணவில்லை. நான் கண்டது பெண்ணை அல்ல, பெண்மையைக் கண்டேன். கண்டனன் கற்பினுக்கு அணியைக் கண்களால் இலங்கைத் தென்னகரில் ஐயனே! இனி தவிர்தி

ஐயமும் பண்டுள துயரமும்.

ஐயா! உன் பெருந்தேவி என்னும் உரிமையை நிலைநாட்டிவிட்டாள். தசரதனின் மருமகள் என்ற வாய்மைக்கும் விளக்கமாக நின்றாள். மிதிலை வேந்தன் தன் பெருந் தனயை என்னும் தன்மைக்கும் தகைமை சான்றாள். நீங்கள் பெருமைபடக் கூடிய நிலைமையில் அவள் விளங்குகின்றாள். ஆனால் என்னைப் பொறுத்தவரையில் அவள் என் பெருந் தெய்வம் ; அய்யா நான் வழிபடக் கூடிய தெய்வத் தன்மையை அவளிடம் காண்கிறோம். பொன்னுக்கு நிகராகப் பொன் அலது இல்லை. அவளுக்கு நிகர் அவள் அன்றி வேறு இல்லை என்பதை அவள் காட்டி விட்டாள். அவளை உரிமையாகப் பெற்ற உன்னை ஒப்பார் வேறு உலகில் இல்லை என்பதையும் உணர்த்தி விட்டாள். அவளைக் கண்ட பேறுபெற்ற எனக்கு நிகர் நானே என்பதையும் எனக்குத் தந்திருக்கின்றாள்.

உன் குலம் உன்னதாக்கித் தன் குலம் தன்னதாக்கி இத்தனிமை செய்த இராவணனின் வன்குலம் கூற்றுக்கு ஈந்து வானவர் குலத்தையும் வாழ்வித்து என்குலம் எனக்குத் தந்தாள். எல்லோரும் பெருமைப்படும்படி அவள் அங்கே தவ விளக்காய் ஒளிவிடுகின்றாள்.

இரா: உன் சொல்லின் செல்வத்துக்கு அளவே இல்லையா! இன்னும் எவ்வளதான் உயர்த்திப் பேசப் போகின்றாய்! எவ்வளவுதான் பேசமுடியும்;

அனு: விற்பெருந் தடந்தோள் வீர! வீங்கு நீர் இலங்கை வெற்பில் நற்பெருந் தவத்தளாய நங்கையைக் கண்டேன் என்று சொல்வதைவிட இற்பிறப்பு என்பதொன்றும் இரும்பொறை என்பதொன்றும் களி

நடம் புரியக் கண்டேன் என்று சொல்வதில் நான் பெருமைப் படுகின்றேன்.

இலங்கை மாநகரில் ஒரு பக்கம் விண்ணளாவிய சோலையில் உம் தம்பி புல்லினால் தொடுத்த பன்னசாலையில் இருந்தாள் ஐய! தவம் செய்த தவமாம் தையல்.

சோகத்தாளாய இந்நங்கை கற்பினால் அவள் மட்டும் பெருமை அடையவில்லை. பெண் குலமே பெருமை அடைகிறது. வானுலகத்து மங்கையர் அனைவரும் வான் சிறப்பு உற்றார்கள். பார்வதியைச் சரிபாகத்தாள் என்றோ, இடபாகத்தாள் என்றோ இனிக் கூறமுடியாது. அவள் இனி ஈசன் உச்சியில்தான் இடம் பெறுவாள். அவளை மகுடத்தாள் என்று தான் கூறமுடியும். திருமகளும் இனித் திருமாலின் மார்பில் வாழாள். அவள் உச்சியில் உயர அமர்வாள். இனி மண்ணுலகத்து மாதர்களும்,

**இரா:** பெருமையோடு விளங்குவார்கள். பெண் குலத்திற்குப் பெருமை தந்தாள். என்பதை இப்படி எல்லாம் உன் சொல்லாற்றலால் வளைத்துவளைத்துப் பேசுகின்றாய். அது போகட்டும்; நான் கொடுத்த கணை ஆழி?

**அனு:** மகிழ்ச்சியும் சோகமும் ஒருசேர அவளிடம் கண்டேன். அந்த மணி அவள் கையகத்துப் பட்டதும் அதன் மெய்த்தன்மை மாறிவிட்டது. அவள் அதனை அணைத்தபோது மணி அங்கு இல்லை. அவள் உன்னைத்தான் அதில் கண்டாள்; அவள் மேனிகுளிர்ந்தது. அக் கணையாழி வஞ்சர் நாட்டுக்கு வந்ததே என்று தன் கண்ணீரால் அதனைக் கழுவி நீராட்டினாள்.

இரா: பிறகு அவள்?

அனு: ஒன்று உமக்குப் கொடுத்தாள். அதுவும் ஒரு மணி தான்: சூடாமணி என்றாள், அதனையும் கொண்டு வந்துள்ளேன்.

இரா: சூடாமணியை எனக்குச் சூட வந்தாய் !
மணி யேந்தி வந்த மணியே!

அனு: இந்த மணியோடு என் பணியும் முடிந்தது.

இரா: வாழ்க அனுமன்! வாழ்க சொல்லின் செல்வன்.

**சுக்கிரீவன்:** அவன் பணி முடிந்தது.

இனி வில்லின் செல்வராகிய உங்களுக்குத்தான். கடமை காத்து நிற்கிறது. இனி வில்லுக்குத்தான் வேலை; சொல்லுக்கு இல்லை. வாழ்க வில்லின் செல்வர்கள்.

## வாய்ச் சொற்கள்

இந் நூலின் இரண்டாவது நாடகமாக இதனை அமைத்துள்ளேன்; சொல்லின் செல்வன் கம்பன் படைப்பு. அவ்வை கபிலர் இவர்களின் வாய்ச்சொற்கள் தமிழகத்தின் மையமாகக் கொண்டு இந்நாடகம் சுழல்கிறது.

இச் சுழ்ற்சியின் பாத்திரங்கள் **அவ்வை, அதிகன், கபிலர் பாரி மகளிர், அவன் மனைவி கண்ணகி.** இச் சுழற்சியில் ஓர் அழகு வடிவம் அதைத்தான் ஒரு நாடக மாகப் படைக்கிறேன். கருத்து, பழமையோர் படைத்தது; அதனைப் பொருத்தி நாடக வடிவு தந்தது புதுமை; ஓர் படைப்பு - இது தான் நான் செய்தது.

ரா. சீ

# வாய்ச் சொற்கள்

## காட்சி : 1

### அவ்வை, அதிகமான்

**அவ்வை:** நெல்லும் உயிரன்றே நீரும் உயிர் அன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்.

இது தென்னகைத்தின் குரல்.

**அதிகன்:** புலவர்கள்தாம் மன்னர்க்கு உயிர். இது என்னகத்தின் குரல். நான் ஒன்று கேட்கிறேன். நம் இருவர் கையில் ஒன்று உள்ளது: அது பொது; எது?

**அவ் :** கோல்; ஒன்று செங்கோல் மற்றொன்று எழுது கோல். ஒன்று புறத்திற்கு; மற்றொன்று அகத்திற்கு.

**அதி:** செங்கோல் நாட்டைச் செம்மை படுத்துவதற்கு; எழுதுகோல் உள்ளத்தை உயர்த்திப் பண்படுத்துவதற்கு. உங்கள் சொற்கள் இந்நெல்லிக்கனிபோல் எனக்கு இனிக்கின்றன. இனிய கவிதை தரும் உங்கள் வாய்க்குச் சுவைக்க இக்கனி தருகின்றேன். நீங்கள் தரும் கவிதையை நான் சுவைக்கின்றேன். நான் தரும் கனியை நீங்கள் சுவைக்க வேண்டுகின்றேன்.

(அவ்வையின் அழகிய கூந்தலை வருடி விடுகின்றான். அவ்வை, கனியைச் சுவைத்து உண்கிறார்.)

**அவ்:** வேல் நுழையும் இடமெல்லாம் நீ நிற்கின்றாய்; உண்ணும் இடமெல்லாம் நான் இருக்கின்றேன்; சோறும் கறியும் யாம் உண்ண நீ மகிழ்ந்து அளிக்கின்றாய்!

யாம் ஒருநாள் வந்திலம்; இரு நாள், வந்திலம்; பலநாள்பயின்று பலரொடு வந்தாலும் தலைநாள் போன்ற விருப்பொடு இருப்பு அளிக்கின்றாய். யானை தன் கோட்டிடை வைத்த கவளம்போலப் பாட்டிடை வைத்த பரிசில் எங்களுக்கு உரியது.

**அதி:** உம் பாராட்டுக் கேட்டு நான் உவகையுறுகின்றேன். உம் பாட்டுத்தான் என்னை வெற்றி வீரனாக்குகின்றது.

**அவ்:** வெற்றி வீரன். உன போர்க்கோலம் எங்கள் கண்களை விட்டு அகலாது. அதனை ஓர் அழகிய சித்திரமாகக் காண்கின்றேன்.

கையிலே வேல்; காலில் கழல்; மெய்யிலே வியர்; மிடற்றில் பசும்புண். வெற்றிசூடிய உன் சுருண்ட முடி என் நினைவை விட்டு எப்படி அகலும்! புலியைப் பொருத களிறு போல உன் சினம் மாறாது. செறுவரை நோக்கச் சிவந்த கண் நின் சிறுவனை நோக்கியும் அமையவில்லயே! இந்தப் போர்க் கோலம் என் கவிதையில் அழகிய சொற்கோலமாக இடம்பெறுகிறது.

இனிக்கிறது. யாழொடும் கொள்ளாது. பொழுதொடும் புணராது.பொ ருளறியவாராது. ஆயினும் தந்தையர்க்கு அச்சொற்கள் அமுதமாக இனிக்கின்றன. என் சொற்களும் தங்களுக்கு அதேபோல் இனிமை செய்கின்றன. அது மட்டுமா! ஊர்ச் சிறுவர் யானையின் வெண்கோடு கழுவ அது நீர்த் துறை படியும்; அதைப்போல எமக்கு நீ இனியை; யாணையின் கடாம்போலப் பகைவர்க்கு இன்னாய் நீ,

**அதி:** அவ்வையே! உம் வாய்ச்சொல் எனக்கு இனிமை பயக்கிறது; ஒப்புக்கொள்கின்றேன் மற்றொன்றும்

எதிர்பாக்கின்றேன். அஃது உறுதியையும் பயக்க வேண்டும். தொண்டைமானிடம் உம் வாய்ச் சொல் எனக்கு உதவ வேண்டும். தூது சென்று ஏது காட்டிப் போரை நிறுத்த வேண்டும் இதுதான் வேண்டுவது.

அவ்: அப்படியே செய்கிறேன். கபிலர் என்னைக் காண விழைகின்றார். வருகின்றேன்; விடை பெறுகின் றேன்.

**காட்சி : 2**

*அவ்வை, கபிலர்.*

கபி: வாய்ச்சொல்! அவ்வையின் வாய்ச்சொற்கள் ஒரு நாட்டின் போரையே நிறுத்தின. என் சொற்கள்! அதோ அவ்வையாரும் வந்துகொண்டிருக்கிறார்கள், வாருங்கள்.

அவ்: ஏதோ தனிமொழி பேசிக்கொண்டிருந்தீர்களே?

கபி: உங்கள் வாய்ச் சொற்கள் ஒரு போரையே நிறுத்திவிட்டன! அதைத்தான் நினைத்துக் கொண் டிருந்தேன்.

அவ்: நான் உண்மையைத்தான் சொன்னேன்.

'இங்கே பீலி அணிந்து மாலை சூட்டிக் காம்பு திருத்தி நெய்யணிந்து காவல் நிறைந்து அழகிய மாளிகையில் தொண்டைமானின் படைகள் கொலு வீற்றிருக்கின்றன.

அங்கே அதிகனின் படைகள் பகைவரைக் குத்திக் கோடுநுதி சிதைந்து கொல்லன் உலைக்க ளத்தில் குலைந்து கிடக்கின்றன என்றேன். இது தான் நான் சொன்னது.

கபி: போர் நின்றது; நானும் அங்கதம் பேசினேன்; போர் மூண்டது. இதைத்தான் ஒப்பிட்டு ஆராய்ந்து கொண்டிருக்கின்றேன்.

'பாரி பாரி என்று ஒருவன் புகழ்வர்
செந்நாப் புலவர்; பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டு ஈண்டு
உலகு புரப்புதுவே.'

என்று அவன் பெருமையைப் பாடினேன். வஞ்சப் புகழ்ச்சி என்று என் வாய்ச் சொல்லுக்கு அணிநயம் கண்டனர். உம்மையும் அவ்வாறே புகழ்கின்றனர்.

உம்முடைய பாட்டு அமைதியை ஆக்கியது; என்னுடைய பாட்டு அமைதியைப் போக்கியது ஆக்கப்பாடல் உம்முடையது; அழிவுப் பாடல் என்னுடையது,

அவ்: உலகு புரப்பது பாரி என்றீர்; அதனால் உலகில் மாரிக்கு இடமில்லாமல் போய்விட்டது; உலகம் கொந்தளிப்புப் பெற்றுவிட்டது. உலகே இந்தப் பாட்டைக் கேட்டுப் பகையாக மாறியது. புகழைக் கண்டு பாரியை அகழ்ந்துவிட எண்ணினர். மூவேந்தர். நாடும் குன்றும் ஒருங்கே சூழ்ந்து கொண்டனர். அதனால்.

கபி: அதனால், என் வாய்ச் சொல்லின் விளைவு மூவேந்தரைச் சினக்கச் செய்தது. அவன் குன்றைப் பாடினேன்; அவன் புகழைப் பேசினேன். இதுதான் நான் செய்த தவறு.

நீரினும் இனிய சாயற் பாரிவேள்பால் பாடிச் சென்றால் பரிசில் கிடைக்கும் என்று பலருக்கு வழி காட்டினேன். பாடுவார்க்குப் பறம்பு உரியது என்றேன். பரிசிலர் இரப்பின் பாரி அவர் வழி நிற்பான் என்று கூறினேன்.

அவ்: அதனால் என்ன? அவன் கொடை வளத்தை உங்கள் பாவளத்தில் சிறப்பித்தீர்கள்.

கபி: இங்கேதான் தவறு செய்துவிட்டேன். யாரிடம் பேசுகின்றோம் என்பதை மறந்து பேசி அதை நினைக்கும் போதுதான் நான் எவ்வளவு பெரிய தவறு செய்துவிட்டேன் என்பதை உணர் கின்றேன். ஆணவத்தால் தவறு செய்து விட்டேன். வாய்ச் சொல்லில் பிழை செய்து வைத்தேன்.

அவ்: வாய்மொழிக் கபிலன் தவறிப் பேச மாட்டான்.

கபி: வாய்மொழிதான் என் தலைவனைப் பகைவரிடம் காட்டிக் கொடுத்துவிட்டது.

**'கடந்தடு தானை மூவிரும் கூடி**
**உடன்றனிர் ஆயினும் பறம்புகொளற்கு அரிதே**
**முந்நூறு ஊர்த்தே தண்பறம்பு நன்நாடு**
**முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர்'**

அவ்: ஆகா, அவன் வள்ளல் தன்மையை மிக அழகாக உரைத்தீர்; பறம்பு நாடு பரிசிலர்க்கு உரியது என்றீர்கள்.

கபி: அதோடு நின்றிருந்தால் சொல்லில் பிழை இல்லை. வாய்மொழியால் கெட்டேன்.

**'யாமும் பாரியும் உளமே**
**குன்றும் உண்டு நீர் பாடினிர் செலினே'**

என்று வழி காட்டிவிட்டேன்.

அவ்: பாடிச் சென்றால் குன்றம் உண்டு என்று நீங்களே காட்டிக்கொடுத்துவிட்டீர்கள்.

கபி: **'அளிதோ தானே பேரிருங் குன்றே**
**வேலின் வேறல் வேந்தர்க்கு அரிதே'**

என்று அவனை வெல்லும் அருமையைப் பெருமை படக் கூறினேன்.

**'நீலத்து இணைமலர் புரையும் உண்கண்**
**கிணைமகட்கு எளிதால் பாடினள் வரினே'**

என்று அவனைக் கொல்லும் எளிமையைச் சிறுமை படக் கூறிவிட்டேன். அவர்களுக்கு நானே வழி காட்டிக் கொடுத்துவிட்டேன்.

அவ் : அதனால்.

கபி: அதனால்! அந்தக் காட்சியை உங்கள் கண் முன்னால் வைக்கின்றேன்: சொன்னால் அது என்னால் முடியாது.

## காட்சி : 2 அ (செய்திக் காட்சி)

### கபிலர், பாரிமகளிர்

கபி: பறம்பே! உன்னைவிட்டுப் பிரியும் எங்கள் துன்பத்திற்கு வரம்பே இல்லை. ஈண்டு நின்று பார்த்தாலும் தோன்றும் இச்சிறுமலை. சென்று நின்று பார்த்தாலும் தோன்றும் இச்சிறுமலை. இது முன் இப்பொழுது யார் என்று கேட்பாரற்றுப் பாழ்பட நிற்கிறது; தேர்வீசு இருக்கை உடைய அக் குன்று பகைவர் கையில் சிக்கியுள்ளது.

ஒரு சார் அருவி ஆர்க்கும்; ஒரு சார் பாண ருக்கு வார்த்தகள் அலைத்து ஒழுகும். இந்த இரண்டு காட்சிகள் எம் கண்ணைவிட்டு அகலா.

வானத்தில் மட்டும் வளர்மதி காட்சியளிக்க வில்லை. பாரியின் பறம்பிலும் ஒரு வளர்மதி காட்சியளிக்கும் எட்டாம் நாள் பிறையைப் போல்

பாறையும் கல்லும் கலந்து வளைந்த கரையை யுடைய தெண்ணீர்ச் சிறுகுளம் காட்சி அளிக்கும். அது இனி என்ன ஆகுமோ! குடிப்பார். அற்று அதன் கட்டெல்லாம் இனிக் கட்டழியும்; தெண்ணீர் எம் கண்ணீரைப் போல இனிக் கலங்கி வழியும். கரையும் இனி இருவழிக் கரை யும்.

நீர் வார் கண்ணேம் தொழுது நின்னை வாழ்த்திச் செல்லுகின்றோம் பறம்பே நீ வாழி ! வாய்ச் சொல்லால் உன்னைப் பாடினேன். அதே சொல்லால் உன்னை அழித்தேன்.

பாரி மகளிர்: இந்தப் பறம்பு மலை எவ்வளவு உயர்ந்திருந் தது. நாம் அதன் உயரத்தைப்போல் உயர்ந்திருந் தோம். அதன் உயரத்தில் இருந்த நாம் அதன் அடியில் நிற்கின்றோம். அதன் பனிச்சுனைத் தெண்ணீர்போல இன்று கண்ணீர் விடும் நிலை ஏற்பட்டு விட்டது. எவ்வளவு பெரிய மாறுதல்.

கபிலர்: உங்களுக்கு எப்படிதான் இனி ஆறுதல் கூறப்போ கின்றேன். அதுதான் எனக்குத் தெரியவில்லை. வாய் மொழிக் கபிலன் வாய்திறக்க முடியாமல் தவிக்கின்றான்; வழி தெரியாமல் திகைக்கின்றான்.

பாரி மகளிர்:

**அற்றைத் திங்கள், அவ்வெண் ணிலவில்**
**எந்தையும் உடையேம் எம்குன்றும் பிறர்கொளார்**
**இற்றைத் திங்கள் இவ்வெண் ணிலவின்**
**வென்றெறி முரசின் வேந்தர்எம்**
**குன்றும் கொண்டார் யாம் எந்தையும் இலமே**

**இந்த இரண்டு காட்சிகள்!**

கபி: உங்கள் வாய்ச்சொற்கள் நெஞ்சைப் பிளக்கின்றன. குன்று என்று சொல்லும்பொழுது நான் பெருமை யோடு பேசினேன். போரினால் பகைவர் வெல்ல முடியாத வளமும் வாழ்வும் பெற்றிருந்தோம். வளம் அதன் அகத்து உடைத்து. ஒரு பக்கம் மூங்கில் நெல்; மற்றொரு பக்கம் தீஞ்சுளைப் பலா ; கீழே வள்ளிக் கிழங்கு மேலே குன்றிலே குன்றாத தேன்; நெல்லும், பழமும், கிழங்கும், தேனும் சொல்லுமே அதன் வளத்தை. வானம் அளக்கும் மலையும், மீனை நிகர்க்கும் சுனையும் நானே அவர்களுக்குக் காட்டிக் கொடுத்துவிட்டேன்.

**'மரந்தொறும் பிணித்த களிற்றறினிர் ஆயினும்**
**தாளிற் கொள்ளலிர் வாளில் தாரலன்**
**யான் அறிகுவன் அது கொள்ளுமாறே'**

'என்று நானே வழிகாட்டிக் கொடுத்துவிட்டேன்.

**சுகிர்புரி நரம்பின் சீறியாழ்ப் பண்ணி**
**விரையொலி கூந்தல் நும் விறலியர் பின்வர**
**ஆடினிர் பாடினிர் செலினே**
**நாடுங் குன்றும் ஒருங்கீ யும்மே.'**

இதுதான் என் வாய்ச் சொல். அதை நினைத் துத் தான் என் தவற்றினை உணர்கின்றேன்.

உமணர் செலுத்திய உப்பு வண்டிகளைப் பார்த் துப் பொழுதுபோக்கி வந்த உங்களைப் பகைவர் செலுத்திய பரித்தேர்களைக் கண்டு அஞ்சி வேர்க்கும்படி செய்து விட்டேன்.

நோகின்றேன் நான்: வேகின்றேன் சொல் லொணா வேதனையால்; சாகின்றேன் நான், வழி ஒன்றும் தெரியாக் காரணத்தால்.

பாரி மகளிர்: நிலவில் கொஞ்சிய எம் தந்தை துஞ்சி விட்டார். அஞ்சும் உள்ளங்கள் பஞ்சு என வேதனை அடைகின்றன. போவோம் இப் பறம்பை நீங்கி; மறப்போம் பழைமையை; நமக்கும் இதற்கும் உள்ள கிழமையைத் துறப்போம்!

## காட்சி 2 ஆ (மீண்டும் பழைய காட்சி)

### அவ்வையும் கபிலரும்

கபிலர்: மறப்போம் பழமையை: முயல்கிறேன் முடிய வில்லை; நா காக்க; காவாக்கால் சோ காக்க.

அவ்வை: கவிஞர்கள் நாவலராதலோடு காவலராகவும் விளங்க வேண்டியுள்ளது. காப்பதில் வல்லவராக விளங்க வேண்டியதுதான்.

கபிலர்: அதுதான் நாவன்னையும். உங்களிடம் நாவன்மை உள்ளது; பாவன்மையும் உள்ளது ; காவன்மையும் உள்ளது.

அவ்: நாவால் இத்துன்பநிலை விளைந்தது என்று நீங் கள் உணர்ந்து சொல்லும் பொழுது இஃது அதிர்ச்சியைத் தருகிறது. வாய்ச்சொற்கள் இவ் வளவு விளைவிக்கும் என்று யாரும் எதிர்பார்க்க முடியாது. வீரத்தை எழுப்பும் கவிதைகள் சோகத்தை விளைவித்துவிட்டன. வீரம் ஒளி; சோகம் அதன் நிழல்.

கபி: நிழல், நீங்கள் நிழல் என்கிறீர்கள்; நான் அதை இருள் என்கின்றேன்.

அவ்: நிழலில் இருள் இருக்கத்தான் செய்யும்; ஒளியால் விளைந்த நிழல் அதனை இருள் என்று கூறார்;

அது புகழ்; அந்தப் புகழ் அவலத்தின் அடிப் படையில்தான் அமையும்.

கபி: உங்கள் விளக்கம் என்னை எண்ண வைக்கிறதே தவிர துன்பத்தை ஆற்றவைக்கவில்லை; வருகிறேன். பாரி மகளிர் எனக்காகக் காத்து நிற்பார்கள் அவர்கள் அவலம் துடைத்தால்,

அவ்: அதை முதலில் கவனியுங்கள், பிறகு சந்திக்கலாம்.

## காட்சி : 3

## அதிகனும் அவ்வையும்

அவ்வை: (கவிதை எழுதுகின்றார் நிறுத்தி நிதானமாக)

**'களம்புகல் ஓம்புமின் தெவ்விர்; போர் எதிர்ந்து**
**எம்முளும் உளன் ஒருபொருநன்; வைகல்**
**எண்தேர் செய்யும் தச்சன்**
**திங்கள் வலித்த கால்அன் னோனே.'**

அதி: என்ன புதிய கவிதை! எதைப்பற்றி ?

அவ்: உன் வீரத்தைப் பற்றி; களம் புக்ப் பகைவரின் உளம் அஞ்சவேண்டும் என்பதற்குத்தான் இக் கவிதை எழுதுகின்றேன். உன் வலிமையைப் பாராட்டி எழுதுகின்றேன். ஏட்டில் எழுதும் கவிதை அவர்கள் உள்ளத்தில் பதியும்.

அதி: பதிந்தால்

அவ்: போரை விலக்குவர் ; அஞ்சி அகல்வர்.

அதி: இதுவும் உங்கள் சொல்லாற்றலே; என் போர்த் தினவை உங்கள் பாவால் மற்றவர்க்கு உணர்த்து கின்றீர். அதனால் போர் என்னும் வாய்ப்பே எனக்குக் குறைந்து விடுகிறதே!

அவ்: போர்த்தினவு. அதைப்பற்றியும் ஒரு கவிதை எழு

தியிருக்கின்றேன். அந்தத் தினவைக் கேட்ட அவர்கள் அந்தத் தினமே ஓடுவர்; எளியவர்கள் உங்களை எதிர்ப்பதைவிட எதிர்க்காமல் இருப்பதே மேல்; விறலியின் கூற்றாக இப்பாட்டினை அமைத்துள்ளேன். தானை மறத்தைப் பாடினால் எதிரிகளின் சேனைகள் எல்லாம் எஞ்சாமல் நீங்கும்; இதுதான் என்பாட்டு; நாடகப்போக்கில் அமைத்துள்ளேன்.

**வேந்தன்:** வாள் நுதல் விறலி! நும் நாட்டில் போர் செய்யும் பொருநரும் உளரோ?

**விறலி:** பொருநரும் உளரோ என வினவிய பொருபடை வேந்தே! எறிகோல் அஞ்சா அரவின் அன்ன சிறு வன்மள்ளரும் உளர்.

**வேந்தன்:** மள்ளர் இந்த நாட்டில் எல்லாப் பகுதிகளிலும் இருக்கின்றார்கள்; உன் தலைவனைப் பொறுத்துத் தான் வெற்றி அமையும். அவனைப்பற்றித்தான் நான் அறிய விழைகின்றேன்.

**விறலி:** அவன் போர் என்றால் புறப்படும் இயல்பினன்; மரக்கிளை காற்றுக்கு அசைந்தால், அதில் தொங் கவிடப்படும் வெறும் பறை அசைந்து ஒலித்தால், உடன் அசைவான். அது போர் என்று விழித்து எழுவான். அவன்தான் எம் தலைவன்,

**வேந்:** வருகிறேன், இந்தத் திக்குத் திரும்பேன்; திசை தப்பி வந்துவிட்டேன்.

**அவ்:** இதுதான் என் பாட்டு

**அதி:** தொண்டைமானிடம் தூதுபோன பாட்டைநாடே பாராட்டிக் கொண்டிருக்கிறது. இந்தப் போர்த் தினவைப் பற்றிய பாட்டைக் கேட்டால் பகைவர் போர்ப்பறையைக் கேட்டவர் ஆவர். எனது வேலை

விட உங்கள் சொல் ஆற்றல் மிக்கது.

அவ்: வாய்ச் சொல்லுக்கு இவ்வளவு ஆற்றல் உள்ளது என்று நீங்கள் ஒப்புக்கொள்ளும் பொழுது உண்மையில் நான் பெருமகிழ்ச்சி அடைகின்றேன். ஆனால் எங்கள் நா அசைவது உங்கள் வீரம் அசைந்தால்தான். வீரமும் கொடையும் எம் நாவைத் தாலாட்டுகின்றன. அதைத்தான் இத் தமிழகம் பாடல் என்று பாராட்டுகிறது.

உம் வீரம்தான் எங்கள் உள்ளத்தை அசைக்கிறது.

ஞாயிறுமுன் இருள் நிற்காது; புலி உடன்றால் மான்கணம் நில்லா; கல் பிளக்க நடக்கும் பெருமிதப் பகட்டுக்குத் துறை என்பது ஒன்று இல்லை; நீ களம் புகுந்தால் பொருநர் பொரார். இத்தகைய வீரம்தான் என் நாவை அசைக்கின்றது.

அதி: அதைத்தான் நான் முன்னமே சொன்னேன். எங்கள் செங்கோல் நாட்டைச் செம்மைபடுத்துகிறது; உங்கள் எழுதுகோல் உள்ளத்தைப் பண்படுத்துகிறது. இப்போழுது மற்றொன்றையும் சேர்த்துக் கொள்கிறேன். எங்கள் வேல் பகைவர் மார்பில் மட்டும் பாய்கின்றது; உங்கள் சொல் அதையும் கடந்து அவர்கள் உள்ளத்தை ஊடுருவுகின்றது.

அவ்: உள்ளத்தை ஊடுருவுவது மட்டும் அல்ல; உயர்த்தவும் செய்கிறது. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற பூங்குன்றனார் வாய்ச்சொல் தமிழகத்தையே உயர்த்திவிட்டது. 'நாடு என்பது வெறும் மண்ணல்ல; நீர் அல்ல; மன்னன்' என்று மோசிகீரனார் பாடினார். இன்னும் ஓரளவுக்கு இக் கருத்தை விரிவு படுத்த விரும்புகின்றேன். மன்னனை மட்டும் பொறுத்தது அல்ல நாடு; மக்களையும் பொறுத்து இருக்கிறது.

'எவ்வழி ஆடவர் நல்லர்; அவ்வழி நிலம் வாழும்' இதுதான் என் முடிந்த கருத்து.

அதி: மக்கள் உள்ளத்தைப் பண்படுத்தும் கருத்து. நெல்லிக்கனியின் சுவை சுவைக்கும்தோறும் இனிக்கும்; உங்கள் வாய்ச்சொற்கள் நினைக்கும்தோறும் இனிக்கின்றன.

அவ்: நெல்லிக்கனியின் அருமையை மறைத்துச் சாதல் நீங்க எனக்கு அளித்தாய்; இதை நினைக்கும் தோறும் என் கற்பனை எங்கோ பறக்கிறது. அஞ்சிய உயிர்களை நஞ்சை உண்டு காத்த மணிமிடற்றோன் என் நினைவுக்கு வருகிறான். 'நீலமணி மிடற்று ஒருவன் போல நீயும் மன்னுக' என்று வாழ்த்துவதைத் தவிர வேறு நான் என்ன சொல்ல முடியும்.

அதி: உங்கள் கவிதை அழியா வாழ்வு பெற்றது. நான் அழிந்தால், என் வரலாறு உங்கள் வாய்ச்சொல்லில் வாழ்வு பெறும்.

## காட்சி:4

### அவ்வை, கபிலர்

அவ்வை:

**'அற்றைத் திங்கள் அவ்வெண் ணிலவில்**
**எந்தையும் உடையேம் எம்குன்றும் பிறர்கொளார்**
**இற்றைத் திங்கள் இவ்வெண் ணிலவில்**
**வென்றெறி முரசின் வேந்தர்எம்**
**குன்றுங் கொண்டார்யாம் எந்தையும் இலமே.'**

என்று உருக்கமாகக் கூறிய அவர்கள் செய்தி

என்னை உருக்கிவிட்டது. பாரிமகளிர் வாய்ச் சொற்கள் என்னைத் துன்பத்தில் ஆழ்த்திவிட்டன. நீர் வாரும் கண்ணோடு நீங்கள் பாரி பறம்பின் அழிவைச் சொல்லும்போது அத்துன்பம் என் நெஞ்சை அழிக்கிறது.

கபிலர்: வாய்மொழிக் கபிலன் என்று நாடே என்னைப் புகழ்கிறது. அந்த வாய்மொழி விளைத்த விளைவு எண்ணும்பொழுது என்மனம் வேதனை அடைகிறது. குன்றெல்லாம் அவன் புகழைப் பாடினேன். அந்தக் குன்றை எண்ணி நான் இப்பொழுது குன்றிவிட்டேன். என்சொற்கள் அவன் மகளிருக்குக் கண்ணீரைப் பெருக்கிவிட்டன.

அவ்வை: புலவர்கள் வாய்ச்சொற்கள் கண்ணீரையும் துடைத்து இருக்கின்றன. பேகனின் மனைவியின் கண்ணீரை உங்கள் சொற்கள் துடைத்து இருக்கின்றனவே.

கபிலர்: கபிலர் பிறர் கண்ணீரைத் துடைத்தான் என்ற பெருமையைப் பெற்றேன். அவனே பிறருக்குக் கண்ணீரைத் தந்தான் என்ற இகழ் மொழியை உண்டாக்கிவிட்டேன். இரண்டு காட்சிகள் என் நினைவுக்கு வருகின்றன. கண்ணகியின் கண்ணீர்; பாரி மகளிரின் கண்ணீர்; ஒன்றைத் துடைத்தேன்; மற்றொன்றைத் துடைக்க முடியவில்லை, கண்ணகியின் கண்ணீர்; அது-

## காட்சி : 4 அ (நினைவுக் காட்சி)

**கபிலர், பேகன், அவன் மனைவி கண்ணகி**

கபிலர்: யார் நீ! பேகனின் கானத்தைப் பாடினால் நீ ஏன்

*கண்ணீரைச் சிந்துகின்றாய். நீ பேகனுக்கு உறவியா?*

**கண்ணகி:** *உறவிதான். ஆனால், இப்பொழுது துறவியாக இருக்கின்றேன்; அவரால் துறக்கப்பட்டேன், இனி நான் அவருக்கு உறவு இல்லை; கிளைஞர் வேறு சிலர் கிளைத்துவிட்டார்கள்.*

**கபிலர்:** *அதனால்தான் நீர் இளைத்துவிட்டீர் போல் தோன்றுகிறது.*

**கண்ணகி:** *எம்போல் ஒருத்தியின் நலம் நயந்து,*

**கபிலர்:** *அழகை நயந்து உன்னை அழவைக்கின்றார்; குறிஞ்சி மருதமாக மாறியுள்ளது; விளங்குகிறது.*

## காட்சி 4. ஆ (கபிலர், பேகன்)

### நினைவுக் காட்சி - தொடர்ச்சி

**கபிலர்:** *காட்டு மயிலின் நடுக்கத்தை மாற்றிய மன்னவனே! உன் வீட்டு மயிலின் நடுக்கத்தை மாற்ற வேண்டுகின்றேன்.*

**பேகன்:** *விளங்கவில்லை, மடத்தகை மாமயில் பனிக்கும் என்று படாஅம் ஈந்தேன்; அதனைப் புலவர்கள் பாட்டில் இசைத்துப் புகழ்கின்றனர். மற்றொரு மயிலும் நடுங்குகிறது என்று கூறி என்னை நடுங்கவைக்கின்றீரே.*

**கபிலர்:** *இது பேசும் மயில்: கண்ணீர் விடும், குழல் இனைவதுபோல் இனைந்து வருந்தும் மயில்;அவள் இனைவு போக்கினால் அதுவே யாம் விரும்பும் பரிசில்; அவள் கண்ணீர் எங்களைச் சுடுகிறது.*

*அருந்துயர் உழக்கும் நின் திருந்திழை அரிவை திருந்திய வாழ்க்கை பெற வேண்டும்.*

**பேகன்:** புலவர்கள் வாய்ச் சொற்கள் என் உள்ளத்தைத் திருத்தின. என் செங்கோலைப் போலவே என் உள்ளமும் செம்மைபட்டுவிட்டது.

## காட்சி 4 இ (பழைய காட்சி)

### அவ்வையார், கபிலர்

**கபி:** கண்ணீரைத் துடைத்த அதே வாயச் சொல்தான் இப்போழுது கண்ணீரைப் பெருக்கி விட்டது. மீண்டும் அந்தப் பாட்டு என் சோகத்தை மிகு விக்கின்றது.

**அவ்:** சோகம் மிகுந்த பாடல்

**'அற்றைத் திங்கள் அவ்வெண் ணிலவு**
**இற்றைத் திங்கள் இவ்வெண் ணிலவு'**

முரண்பட்ட காட்சி. இரண்டு நிலா, ஒன்று ஒளி நிலா; மற்றொன்று இருள். நிலா. இருள் ஒளி இரண்டும் அதில் இருக்கின்றன.

## காட்சி : 5

### கபிலர் : அவ்வை

**கபிலர்:** பாரியை இழந்து கையற்று நிற்கின்றேன். மாரி யைப்போல் வழங்கிய வள்ளல் மறைந்தது என் வாயச் சொல்லை அடக்கிவிட்டது. குறிஞ்சி பாடிய கபிலன் என்று புகழ்பெற்ற நான், அவள் மகளி ரைப் பாலை பாடும்படி செய்து விட்டேன்.

**அவ்வை:** என் செய்வது? வீரம் மட்டும் அல்ல; மரணமும் நம் நாவை அசைக்கிறது. ஒரே முறை பெரிய அசைவு அசைந்து அமைதி கொள்ளச் செய்கிறது அதியர்கோன் மறைந்தது என் நெஞ்சில் ஒரு சுமை

யாக நின்றுவிட்டது. அவன் மார்பில் பாய்ந்த வேல் புலவர் நாவிற் சென்று பாய்ந்தது. அவனை நினைத்தால் அந்தப் பழைய காட்சிகள் வெள்ளம் போல் வேகமாக வந்து நிற்கின்றன.

கள்ளையும் தேனையும் அள்ளிப் பருக எனக்கு அளிப்பான். கறியும் சோறும் கலத்தில் ஈந்து பகிர்ந்து உண்பான. சோற்றில் கறி இருந்தால் அதைத் தனியே எடுத்து எனக்குத் தருவான். வேற்றுப் போர்க்களத்தில் அவன் மட்டும் தனித்து நிற்பான். உண்ணத் துணை தேடுவான்; போர் பண்ணத் தனியே செல்லுவான்.

அவன் மார்பிற் பாய்ந்த வேல் அவனை மட்டும் வீழ்த்தவில்லை; பாணர் கையில் பாய்ந்தது; புலவர் நாவில் தைத்தது.

இந்த நினைவுகள் எல்லாம் என் நெஞ்சில் மிஞ்சி வழிகின்றன. நரந்தம் நாறும் தன் கையால் புலவு நாறும் என் தலையைத் தடவிக் கொடுப்பான். அத்தகைய தலைவனை நான் இழந்தேன்.

என் வாய்ச்சொல் அவனைக் காக்க இயலவில்லை, அவர்கள் மறைவதற்கு நான் மட்டும் காரணம் அல்ல. அவர்கள் வீரம்தான்; உன்னையும் அவ் வாறு பேசவைத்தது உன் வாய்ச் சொல் அல்ல; பாரியின் கொடை மறம்; வீரம், அதனால் நீர் வருந்திப் பயன் இல்லை. நம் தலைவர்களின் அஞ்சா நெஞ்சம்தான் அவர்களைப் போர் முனையில் நிறுத்தியது.

கபி: அவர்கள் அஞ்சவில்லை. ஆனால் நம்மை அஞ்சும்படி செய்துவிட்டார்கள்; அவர்கள் விட்ட அவலம் நம் உள்ளத்தை அவித்துவிட்டது. வாய்ச் சொற்கள் அடங்கும்படி செய்துவிட்டன. நம் உணர்வுதான் இனிப் பேசும்.

அவ்: கையறு நிலையில் சொல்லுக்குச் செயல் இல்லை; வெறும் உணர்வுதான் இனிப் பேசும்.

கபி: அந்த உணர்வில் ஒரு சில செய்திகளை நாம் விட்டுச் செல்கின்றோம். அவையே வாய் மொழிகளாக நிற்கின்றன. நானும் வாய்மொழிக் கபிலன் என்ற நிலையைப் பெறுகின்றேன். தங்கள் சொற்களும் வாய்ச் சொற்களாக நின்று நிலவுகின்றன.

## கேகயன் மகள்

அல்லது

## உறுதிகொண்ட நெஞ்சினாள்

## முன்னுரை

இந்நாடகம் மூன்றாவதாக அமைத்துள்ளேன். இலக்கிய நாடகங்களில் இஃது உச்சநிலை பெறுகிறது. கம்பனின் படைப்பைப் புதிய பார்வையில் காணும்பேறு இந்நாடகத்தில் கிடைக்கிறது. கேகயன் மகளின் தூய்மை உணர்வும் உறுதியும் காவியத்தின் உயிர் என்பதைப் புலப்படுத்துகின்றது. சொல்லின் செல்வன் கம்பனின் பாடல்களை அடியொட்டியது. இது பாத்திரப் படைப்பின் இயக்கத்தை ஒட்டி அமைந்தது. தமிழ் இலக்கியத்தைச் சுவைத்து எழுதிய இந்நாடகம் சொல்லாடும் திறனும், பாத்திரங்களின் கூர்த்த அறிவும், புதிய கருத்துகளும் கொண்டு புதிய சிந்தனையைத் தருவது. கேயன் மகள் அறிவும் பண்பும் நிறைந்த ஒரு பெண்ணாக இதில் விளங்குகின்றாள்.

பழைய பாத்திரங்கள் எனினும், புதிய பார்வையில் அவர்கள் செயலும், பண்பும், நிகழ்ச்சி

*களும் காட்டப்படுகின்றன. கதை பழையது. அதனை மாற்ற உரிமை இல்லை. படைப்புப் புதியது. நடிப்பதைவிடப் படிப்பதற்கு உகந்தது. பாத்திரங்கள் அறிமுகம் தேவையில்லை.*

## கேகயன் மகள்

### அல்லது

## உறுதி கொண்ட நெஞ்சினாள்

### காட்சி : 1

**தசரதன், வசிட்ட முனிவர்**

**தசரதன்:** *(தனியே ) கண்ணாடிமுன் நின்று தன் உருவத்தைப் பார்க்கின்றான்.*

*ஓ! கரிய முடி என் வயதைக் கண்டு வெறுத்து விட்டது. நாணத்தால் வெறுத்ததோ! ஓ! வயது ஆகி விட்டது. வயது ஆகிவிட்டது. பருவம் மாறுகிறது. அதை உணர்த்த உருவம் மாறுகிறது.*

**(பின்னொலி)** *(உள்ளொளி) மன்னா! கரிய முகில்தான் மழை பொழியும்: வெண்முகில் காற்றில் பறந்து திரிய வேண்டியதுதான். நீ இப்போது வெண் முகில்தான் போ. நிற்காதே. கருமைக்கு ஆட்சி கொடு.*

**தசரதன்:** *கருமை; மழை முகில்! இராமனுக்கு ஆட்சி!*

**(பின்னொலி)** *போ நிற்காதே! போ நிற்காதே!*

**தசரதன்:** *நிற்காதே. இராமனுக்கு ஆட்சியைக் கொடுத்து விடு. நீ காட்டுக்குப் போய்த் தவம் செய்.*

**(பின்னொலி)** *நல்ல முடிவு. போ நிற்காதே!*

**வசிட்டன்:** (நுழைகிறான்) நிற்காதே! என்னையா நிற்காதே என்று சொல்கின்றீர்! நான் ஒரு தவறும் செய்ய வில்லையே!

**தசரதன்:** நிற்காதே; முதலில் இராமனுக்கு மணிமுடி சூட்ட வேண்டும். நாளையே நடக்கவேண்டும், தக்க முயற்சிகள் அத்தனையும் செய்யவேண்டும்.

**வசிட்டன்:** தாங்கள்!

**தசரதன்:** உங்களோடு சேர்ந்து தவம் செய்யவேண்டும் இது தான் நான் கொண்ட முடிவு.

**வசிட்டன்:** எப்படியும் எங்களுக்கு வேதனையாகத்தான் இருக்கிறது. இரண்டு கன்றினுக்கு இரங்கும் பசுவைப் போல் ஆகிவிட்டது எங்களுக்கு. மூத்த கன்று நீங்கினால்தான் இளைய கன்று பால் குடிக்க முடியும். அவலமும் உவகையும் ஒருசேர வந்து நிற்கின்றன.

**தசரதன்:** முதலில் அப்படித்தான் இருக்கும். பிறகு ஒன்று தலை தூக்கி நிற்கும்! என் உள்ளொளி உணர்த்துகிறது, நான் விடுதலை பெற வேண்டும் என்று. திருமணக் கோலம் கண்ட நான் என் மகனின் மணிமுடிக் கோலத்தையும் காண விழைகின்றேன். என் இளைய மனைவி! அருமைத் துணைவி! ஆருயிர்த் தேவி!

**வசிட்டன்:** கேகயன் மகளைத்தானே சொல்கிறீர்.

**தசரதன்:** கேகயன் மடந்தையைத்தான் கூறுகிறேன். மட்டற்ற மகிழ்ச்சி கொள்வாள் மகன் பட்டத்திற்கு வருகின்றான் என்று

**வசிட்டன்:** திட்டமிட்டுச் செயல்புரிவாள்

**தசரதன்:** முதற் செய்தியை முதன் முதலில் நான்தான்

*சொல்லவேண்டும் (வெளியேறுகிறான்)*

**வசிட்டன்:** *(தனிமொழி) மகன் பட்டத்துக்கு வருகின்றான் என்று அவள் மகிழ்வாள். மகன்! யார்? இராமனா? பரதனா? என்ன இருந்தாலும் அவள்?*

## காட்சி : 2

### கைகேயி, கூனி

**கைகேயி:** *யார் அது?*

**கூனி:** *உன் தலைவர் மன்னன் தசரதன் உன்னிடம் வர இருக்கிறார்.*

**கைகேயி:** *பழக்கம்தான்; இந்த உலகத்தில் நான்தான் அவருக்கு உயிர்; அவர் உயிரே என்னிடத்தில்தான் இருக்கிறது.*

**கூனி:** *நீ என்றால்! பைத்தியக்காரி! ஆசை உன்மேல்; அன்பு இன்னொருத்தியின் மேல்; இதுவே ஆடவர் சிந்தை.*

**கைகேயி:** *சிந்தை-அதைப்பற்றி என்ன இப்பொழுது நிந்தை.*

**கூனி:** *ஆடவரே பெண்ணினத்தைப் பழிவாங்க நிற்பவர்.*

**கைகேயி:** *புதிய விளக்கமாக இருக்கிறதே!*

**கூனி:** *அனுபவத்தால் சொல்கிறேன். அந்த இராமன் அவன் என் முதுகில் உண்டை வில்லால் குறிபார்த்து அடித்தானே, அது அவன் வீரத்திற்கு...*

**கைகேயி:** *இழுக்கு அல்ல: விளையாட்டு.*

**கூனி:** *தாடகையை வீழ்த்தினானே.*

கைகேயி: அஃது அவசியத்திற்கு

கூனி: மொத்தமாக அவன் நேர்மையற்றவன். வீரம் பழுதுபெற்றவன்.

கைகேயி: அதற்கு நீ ஏன் அழுது கூறுகின்றாய்?

கூனி: அவன் ஆட்சிக்கு வரக்கூடாது.

கைகேயி: தசரதன்!

கூனி: உன்னை அழைத்துக்கொண்டு காட்டுக்குத் தவம் செய்யப் போகிறார். நீ இங்கே நிம்மதியாக இருப்பது பிடிக்கவில்லை.

கைகேயி: சரியாகச் சொல்லித் தொலை.

கூனி: நாளைக்கு இராமனுக்கு முடிசூட்டுவிழா. மறுநாள் மணிமுடி துறந்து மன்னவன் காட்டுக்கு.

கைகேயி: எதற்கு?

கூனி: தவம் செய்ய! அதைச் சொல்லத்தான் அவர் வருகிறார்.

கைகேயி: மிக நல்ல செய்தி! அதைவிட நீ முந்திக் கொண்டாய்; இந்தா என் முத்தாரம்! பொன்னா ரம்! மணியாரம்!

கூனி: பணியாரம்! நீயே வைத்துகொள். இன்று கொடுக்கின்றாய் இந்தப் பரிசை. நாளைக்கு இராமன் மணிமுடியைப் பெற்றால் நீ இதைத் கொடுக்க முடியுமா? சிந்தித்துப்பார்.

கைகேயி: என் மகன் இராமன் பட்டத்திற்கு வருவது எனக்கு எல்லையற்ற மகிழ்ச்சி.

கூனி; உன் மகன் யார்? இராமனா? பரதனா?

கைகேயி: என் வளர்ப்பு மகன் இராமன்; பிறப்பு மகன் பரதன்

**கூனி:** கோசலைக்கு

**கைகேயி:** பரதன் வளர்ப்புமகன். இராமன் பிறப்புமகன்.

**கூனி:** இதெல்லாம் சூழ்ச்சி! உன்னை ஏமாற்றவே இந்தச் சூழ்ச்சி! இராமன் உன்பால் காட்டும் பாசம் எல்லாம் நீ அவன் பட்டத்துக்கு வருவதைத் தடுக்காமல் இருக்கவே.

**கைகேயி:** அக்கம் பக்கம்

**கூனி:** கேட்டால் சிரிப்பர் நீ ஓர் ஏமாளி என்று. பரதனை ஏன் உன் தாய்வீட்டுக்கு அனுப்பி வைத்தார்கள் தெரியுமா?

**கைகேயி:** தெரியும், பாட்டியையும் பாட்டனையும் பார்க்கச் சென்றிருக்கின்றான்.

**கூனி:** அதுதான் இல்லை. இராமனுக்குப் பட்டம் சூட்ட; அவன் அருகில் இருந்தால் உனக்கு அவன் மீது பாசம் வரும்; திரை விலகும்.

**கைகேயி:** திரை! இது என்ன புதுச் சொல். நாடகச் சொல்லாக இருக்கிறதே.

**கூனி:** அதை விலக்கிக் காட்டவே வந்தேன். நீ யார்?

**கைகேயி:** இதென்ன வேதாந்த விசாரணையாக இருக்கிறது; நான் யார்? என் உள்ளம் யார்? இதெல்லாம் வயதானவர்களுக்குப் பொழுதுபோக்கு.

**கூனி:** தெரிந்த பதில்தான். ஆனால் சொல்லுவதில் உன் உள்ளம்...

**கைகேயி:** உள்ளம் எது? உள்ளத்தைத் தெரிந்துகொள்ள விரும்புகிறாய். சரி மீண்டும் கேள். அவர் வருகிற வரையில் பொழுது போக்காகவும் இருக்கும்.

கூனி : நீ யார்?

கைகேயி: நான் யார்? தசரதனின் மனைவி.

கூனி: தசரதனின் மனைவி. பழகிப்போன பதில். புளித்துப் போன செய்தி. நீ ஒருத்திதானா மனைவி?

கைகேயி: நாங்கள் மூவர் அவர் மனைவியர்.

கூனி: அதில் உனக்கு என்ன சிறப்பு இருக்கிறது?

கைகேயி: சிறப்பு; மூவரில் ஒருத்தி, அதுதான் சிறப்பு.

கூனி: இல்லை, நீ கேகயன் மகள். அதுதான் உன் தனிச்சிறப்பு.

கைகேயி: அதனால்தான் என்னைக் கைகேயி என்று கூப் பிடுகிறார்கள்.

கூனி: உன் பெயரை நீ நிலைநாட்டவேண்டும். கேகயன் மகள் நீ; அதை உலகுக்குக் காட்டவேண்டும்; அதிலேதான் உன் புகழ் இருக்கிறது.

கைகேயி: புகழ், அதை நிலைநாட்டினால் உலகம் இகழுமே

கூனி: உலகம் நீ இந்த வாய்ப்பை இழந்தால்தான் இகழும்; நாளைக்கு இராமன் அரசன் என்றால் சீதைக்குப் பெருமை; கோசலைக்குப் பெருமை; நீ அவர்களுக்கு அடிமை.

கைகேயி: யாருக்கு யார் அடிமை? நீ சொல்வது புதுமை யாக இருக்கிறது.

கூனி : எதையும் நீயாக உரிமையாக எடுத்துக் கொடுக்க முடியாது;

கைகேயி: அப்புறம் ! இவ்வளவுதானே! கேட்டுத்தான் கொடுத்தால் போகிறது.

கூனி: இதை நினைத்துப்பார் சனகன் உன் தந்தை

கேகயன் மீது கொண்ட பகையை ஏன் முடிக்காமல் இருக்கிறான்? தன் மருமகன் ஆட்சிக்கு வந்தால், சனகன் உடனே உன் தந்தையின் மீது படையெடுப்பான். இது அரசியல் மாற்றம். உனக்குப் பெரும் ஏமாற்றம். அப்பொழுது.....

கைகேயி: அப்பொழுது?

கூனி: உன் நிலை? உன் தந்தைக்கு உதவமுடியாத நிலை; அழுது அழுது சாக வேண்டும். கேகயன் மகள் என்று சொல்லிக்கொள்ளவே வெட்கப்பட வேண்டும்.

கைகேயி: வெட்கப் படவேண்டும் - எதற்கு?

கூனி: உன் சிந்தனைக்கு! போயும் போயும் ஒரு கிழவனுக்கு மூன்றாம் தாரமாக, அதாவது கடைசி தாரமாக அமைந்தாயே அதற்கு.

கைகேயி: நா அடக்கிப்பேசு! நான் மன்னனின் மனைவி!

கூனி: இன்பத்துக்கு; கொஞ்சலுக்கு; உரிமைக்கு அல்ல.

கைகேயி: நான் இன்பத்துக்கா! உரிமை.....

கூனி: உன் மனம்தான் சொல்லவேண்டும். இளைய ஒருத்தியை அவன் இன்பத்துக்குப் பலியாக்கிக் கொண்டான். இதுதான் உண்மை.

கைகேயி: சிந்தனையைத் தூண்டி விடுகிறாய்!

கூனி: தூண்டினால்தான் சுடர்விளக்கு எரியும், இராமனுக்குப் பிறகு ஆட்சி...

கைகேயி: அது யாருக்கு என்றா கேட்கிறாய்? அப்பொழுது பார்த்துக் கொண்டால் போகிறது.

கூனி: அவன் மக்களுக்கு ; கோசலையின் பேரன்

களுக்கு; பாட்டி, பொக்கைவாய்ப் பாட்டி; உன் மகன் எடுபிடி ஆளாக நிற்க வேண்டியதுதான்; அவன் உன்னை ஏங்கிப் பார்க்க வேண்டியதுதான்.

**கைகேயி:** பயங்கரமாக இருக்கிறதே நீ காட்டும் எதிர் காலம்!

**கூனி:** செயல்படு! அதுதான் வேண்டும். உனக்கு இரண்டுவரம் தந்தருக்கிறாரே, நினைவு இருக்கிறதா?

**கைகேயி:** சம்பரனை வென்றபோது அவருக்குத் தேர் ஓட்டினேன், அவர் உயிர் காத்தேன்;

**கூனி:** ஒன்றில் உன் மகன் நாடாள வேண்டும்; மற் றொன்றில் இராமன் காடு ஏக வேண்டும்;

**கைகேயி:** இராமன் காடு ஏக வேண்டுமா? அதனால் நமக்கு என்ன நன்மை? அவன் ஒருவனுக்குத் தானா இங்கு இடம் இல்லாமல் போய்விடும்?

**கூனி:** காடு ஏகவேண்டும்; இல்லாவிட்டால் நீங்கள் நிம்மதியாக வாழமுடியாது. மக்கள் புரட்சி செய்து கொண்டே இருப்பார்கள்.

**கைகேயி:** என் சிந்தனையையே மாற்றிவிட்டாயே!

**கூனி:** ஆம்! நீ பரதனின் தாய். இதை மறக்காதே. பெண் மையில் ஒரு புரட்சி வேண்டும்; சரித்திரத்தை மாற்ற வேண்டும்.

**கைகேயி:** உறுதிகொண்ட நெஞ்சினாள்; நான் கேகயன் மகள். இதை நிலைநாட்ட வேண்டும். சரித்திரம் மாறவேண்டும். எப்படி?

**கூனி:** உன் இளமை அழகு, இதில் அவன் மயங்கிய மயக்கம்!

**கைகேயி:** மயக்கம், அதுதான் என் நாடகத்தின் தொடக்கம்சி

## காட்சி : 3

### தசரதன், கைகேயி

**(கைகேயி மயங்கிக் கிடக்கிறாள்; தரையில் படுத்துக் கிடக்கிறாள்)**

***தசரதன்:*** *கேகயன் மானே! தேனே! நானே! எழு நீயா இப் படித் தரையில் (எடுத்து அணைத்து எழுப்பு கிறான்; மறுபடியும் நழுவிவிடுகிறாள்.)*

***தசரதன்:*** *மயக்கமா, அல்லது ஏதேனும் சொல்ல...*

**கைகேயி:** *தயக்கம்!*

***தசரதன்:*** *என்ன உன் நெற்றியில்!*

**கைகேயி:** *பொட்டு!*

***தசரதன்:*** *இட்டு*

**கைகேயி:** *அழித்துவிட்டேன். இனி நான் மூவரில் ஒருத்தி யல்ல! தனி!*

***தசரதன்:*** *இனி*

**கைகேயி:** *இந்தப் பசப்பு வார்த்தைகள் வேண்டாம்.*

***தசரதன்:*** *வள்ளல் இராமன் உன் மைந்தன் மீது ஆணை; விரும்பியதைத் தருவேன்.*

**கைகேயி:** *என் மைந்தன் நல்வாழ்வு எனக்கு வேண்டும்.*

***தசரதன்:*** *அதைச் சொல்லத்தான் வந்திருக்கிறேன்; அவன் அடையப் போகும் பட்டம் கேட்டு.....*

**கைகேயி:** *மட்டற்ற மகிழ்ச்சி; திட்டமிட்ட செயல்!*

***தசரதன்:*** *திடீரென்று நினைத்துக் கொண்டேன்.*

**கைகேயி:** நானும் அப்படித்தான் திடீரென்று நினைத்துக் கொண்டேன். நீர் வாய்மை தவறாத மன்ன ரல்லவா?

**தசரதன்:** அப்படித்தான் நினைக்கிறேன். உலகமும் சொல்கிறது.

**கைகேயி:** நீர் என்ன சொல்கிறீர்?

**தசரதன்:** வாய்மைதான் என் உயிர்;வாய்மை தவறேன்.

**கைகேயி:** எனக்கு இரண்டு வரம் அளித்தீரே ?

**தசரதன்:** இரண்டா?

**கைகேயி:** இரண்டே போதும்.

**தசரதன்:** (சிரிக்கிறான்)

**கைகேயி:** ஒன்று என் மகன் நாடாள வேண்டும்.

**தசரதன்:** அதைத்தான் சொல்ல வந்தேன்.

**கைகேயி:** என் மகன் பரதன் நாடாள வேண்டும்!

**தசரதன்:** உன் சொல் அம்பாகப் பாய்கிறது!

**கைகேயி:** மற்றொன்று வேலாகப் பாயப்போகிறது!

இராமன் காடேக வேண்டும்.

**தசரதன்:** வேலினும் கொடுமையானது. உன் மனநிலை யில் தான் பேசுகிறாயா?

**கைகேயி:** வாய்மை மன்னன் வாய்மை தவறமாட்டான். அப்படித்தான் நினைக்கிறேன். உலகமும் சொல்கிறது.

**தசரதன்:** நீ பெண்ணா? பேயா? ஒன்றும் புரியவில்லை.

**கைகேயி:** வயதாகிவிட்டது. பார்வை சிறிது மங்கி

விட்டது; புரியாது.

**தசரதன்:** தீயா? நஞ்சா? உன் சொல்,

**கைகேயி:** இப்பொழுது சுடுகிறது.

**தசரதன்:** பிறகு என்னைக் கொன்று விடும்

**கைகேயி:** கசக்கிறது; முன் இனித்தது, எவ்வளவு பெரிய மாறுபாடு.

**தசரதன்:** வேண்டாம். இராமனைப் பிரிக்காதே. என் உயிரைப் பிரிக்கின்றாய். கண்ணைக்கேள் தருகிறேன். உயிரைக் கேள் உதவுகிறேன். மண்ணைக் கேள் மறுக்கவில்லை. மகனை மட்டும் கேட்காதே.

**கைகேயி:** மன்னன் வாய்மை தவறமாட்டான் என்று நினைக்கிறேன்.

**தசரதன்:** வாய்மை! எது வாய்மை? கருமுகில் வண்ணன் இராமன் என் உயிர். அவன் மணி முடி தாங்கும் கோலம் காண விழைந்தேன். சடைமுடி தாங்கும் கோலத்தை நீ காண்கிறாய் நற்கலை உடுத்தி நானிலம் ஆள நினைத்தேன். வற்கலை உடுத்திக் கானிலம் போக நினைக்கிறாய் நீ. நான் அவனை அரியணை ஏற்றி விட்டு அமைதியாகக் காடுபோக நினைத்தேன்.

**கைகேயி:** உமக்கு எது நல்லதோ அதுவே உம் மகனுக்கும் நல்லது. வேறுபாடு ஏன்?

**தசரதன்:** நீ நினைப்பது போல் உன் மகன் அரசு ஏற்றுக் கொள்ள மாட்டான். அவன் ஏற்றுக்கொண்டாலும் இந்த உலகம் ஏற்றுக்கொள்ளாது. என் மகனைக் கேட்டால் அவனே பரதனுக்கு ஆட்சியைக் கொடுப்பான். இப்பொழுது முறைப் படி இராமன் மணிமுடி தரிக்கட்டும்; பிறகு,

**கைகேயி:** மன்னா நீர்,

**தசரதன்:** வாய்மை மன்னன்; மாறவில்லை. மாறும் உரிமை எனக்கு இல்லை; கொடுத்துவிட்டேன். ஆனால், கொடுத்ததை மீண்டும் கேட்டுப்பெறவிரும்பு கின்றேன். உன்னிடம் இரக்கின்றேன். என் இன்னுயிர்க்கு இரக்கின்றேன். என் இன்னுயிர்க்கு இரக்கின்றேன்.அவன் பிரிந்தால் என்....

**கைகேயி:** உயிர் பிரியும், இது பழைய பாட்டு.

**தசரதன்:** அப்பொழுது நீ அமங்கலி யாவாய்.

**கைகேயி:** நான் இப்பொழுது பரதனின் தாய்; கேகயனின் மகள். தாய்மை வென்றுவிட்டது. பெண்ணின் லட்சியமே அதுதான். கணவன் துணைவன்.... அவனே...

**தசரதன்:** கண்கண்ட தெய்வம் எனப் பத்தினிப் பெண்டிர் வரலாறு கூறுகிறது.

**கைகேயி:** அதில் மாறவில்லை. உம்மோடு வாழ்ந்தவரையில் என் வாழ்வில் ஒரு கறையும் காணமுடியாது. அப்பு அழுக்கற்ற அன்பு செலுத்தினேன். அந்த அன்பின் பரிசுதான் பரதன். அந்த அன்பைத் தான் வாழ வைக்கிறேன். இதுதான் பெண்மை பெண்மை தாய்மையை ஏற்றல் ஒவ்வொரு பெண்ணின் உயர்ந்த லட்சியம். நான் ஒரு லட்சியப் பெண் இயற்கையின் நியதியும் அதுதான்.

**தசரதன்:** வெளியே சொல்லாதே; பெண்மைக்கே இழுக்கு. உலகம் உன்னைப் பழிக்கப் போகிறது.

**கைகேயி:** அதற்கு நான் பொறுப்பல்ல. என் பண்பைப் பிறழ உணரும் உணர்வே அதற்குக் காரணம். அது யாராயினும் சரி, கவிஞர்களும் அப்பிழையைச் செய்யலாம். அவர்களும் உலக நெறிக்கு அஞ்சி

யவர்கள். அதனால் என்னைக் கொடியவளாகப் படைத்துக் காட்டலாம்.

**தசரதன்:** நீ ஒரு பேய்!

**கைகேயி:** அதற்கு நான் பொறுப்பல்ல. மகனுக்காகத் தாயும் பேயாக மாறலாம். நான் ஒரு தாய். உறுதி கொண்ட நெஞ்சினள். என் குலப்பெருமை கொண்டு பெருமை அடைகின்றேன். நான் கேகயன் மகள்.

**தசரதன்:** இந்த நாடே அல்லலில் ஆழுமே!

**கைகேயி:** அதற்குப் பொறுப்பு நான் அல்ல; நாட்டில் உள்ளவர் கொண்டுள்ள தவறான கருத்துகள் காரணமாக இருக்கலாம். என்னை மறுத்தால்,

**தசரதன்:** மறுத்தால்,

**கைகேயி:** வாய்மை தவறி விட்டான் மன்னவன் என்று இந்த உலகம் கூறும். எப்படியும் ஏதாவது கூறும்; கூறிக் கொண்டே இருக்கும்.

**தசரதன்:** கூறும்; அதைத் தசரதன் அறிவான். வரம் கொடுப்பதற்குத் தயங்கான்; கொடுத்தேன் வரம். ஏற்றுக் கொள்

**கைகேயி:** இனி மாற்றும் உரிமை.

**தசரதன்:** யாருக்கும் இல்லை.

## காட்சி: 4

### இராமன்: சீதை, இலக்குவன், சுமந்திரர்.

**இராமன்:** சீதை! மணக்கோலம் கொண்ட நீ மணிமுடிக் கோலம் காணப் போகிறாய்.

**சீதை:** அப்பொழுது,

**இராமன்:** ஆட்சியில் பாதி உனக்கு.

**சீதை:** எப்படி?

**இராமன்:** சரி பாதி என்னோடு உட்காரப் போகிறாய், சிம்மாசனத்தில் உனக்குப் பாதியிடம்.

**சீதை:** நான் அவ்வளவு பருத்தா இருக்கிறேன். பாதியிடம் கேட்க.

**இராமன்:** இரண்டுபேரும் உட்கார்ந்து ஒன்றும் பேச முடியாது. மற்றவர்கள் பேசுவதைத்தான் கேட்க வேண்டும்.

**சீதை:** அது ஒன்று போதுமே; பெண்ணொருத்தியை வாய் மூடிக்கொண்டு உட்கார்ந்திருக்கச் சொன்னால் அதுவே போதும் அவளுக்குத் தண்டனை. சரியான தண்டனைதான் எனக்குக் கிடைக்கப் போகிறது.

**இலக்குவன்:** அண்ணா! நாடெங்கும் மகிழ்ச்சியில் திளைக்கிறது. நான் மட்டும்.

**இராமன்:** என்ன உனக்கு?

**இலக்குவன்:** உங்களோடு சுற்றும் வாய்ப்பை இழக்கின்றேன். உங்களுக்குச் சேவை செய்யும் வாய்ப்பை இழக்கின்றேன்.

**இராமன்:** ஏன்?

**இலக்குவன்:** யார் என்னை விடப்போகிறார்கள். எல்லா வற்றிற்கும் ஆட்கள்.

**இராமன்:** உனக்கும் ஆட்கள்.

(இருவரும் சிரித்தல். அமைச்சர் சுமந்திரர் நுழைகிறார்)

**சுமந்திரர்:** வணக்கம்.

**இராமன்:** அது நாளைக்கு அரசனான பின்பு.

**சுமந்திரர்:** இன்று நீங்கள்.

**இராமன்:** அரசவைக்குத்தானே! நீர் போகவும். உடனே வந்துவிடுகிறேன்.

**சுமந்திரர்:** இல்லை. அன்னையின் அந்தப்புரத்திற்கு. கேகயன் மடந்தை உம்மை உடனே அழைத்துவரச் சொன்னார்.

**இராமன்:** ஆம்; மறந்து விட்டேன். முதலில் அவர்கள் ஆசி பெறுவேன். அன்புத் தாய் கைகேயி யின் கரங்கள்தாம் என்னை முதலில் வாழ்த்த வேண்டும். அவர்களுக்குத்தான் என் பட்ட விழாவில் மிக்க மகிழ்ச்சி.

**சுமந்திரர்:** மிக்க மகிழ்ச்சியால் உங்களை அழைக்கின்றார்கள்.

**இலக்குவன்:** அண்ணா!

**இராமன்:** போகும்போது,

**இலக்குவன்:** கூப்பிடவில்லை. எனக்கு ஒன்றும் தோன்ற வில்லை.

**இராமன்:** மகிழ்ச்சியில் ஒன்றும் தோன்றாது. யாருக் கும் ஒன்றும் தோன்றாது.

**சீதை:** விரைவில் வந்துவிடுங்கள். அதற்குள் நான் ஆடை அணி எல்லாம் அணிந்து சரி செய்து கொள்கிறேன்.

**இராமன்:** நேரம் கழித்து வந்தால்தான் உனக்கு நல்லது.

**இலக்குவன்:** அண்ணா, நான் நேரே அவைக்குச் சென்று.

**இராமன்:** அவசரப்பட வேண்டாம். குறித்த நேரத்தில் அனைவரும் சேர்ந்தே போவோம்.

**இலக்குவன்:** மூவரும் சேர்ந்தே போவோம்.

## காட்சி 5

### இராமன், கைகேயி

**இராமன்:** அன்னையே வணக்கம்.

**கைகேயி:** வருக! ஒரு செய்தி.

**இராமன்:** கேட்கத்தான் வந்திருக்கிறேன். தந்தை

**கைகேயி:** அவர் இனிப் பேசமாட்டார். என்னைப் பேசச் சொன்னார். செய்தி ஒன்று உனக்காகக் காத்து நிற்கிறது. அது உன் தந்தையின் கட்டளை

**இராமன்:** தந்தை, ஏவ, அதனை நீர் எடுத்துச் சொல்ல வாய்ப்புக் கிடைக்கும் என்றால், அதைவிடச் சிறந்த பேறு எனக்கு என்ன இருக்கிறது. தந்தையும் தாயும் நீரே. தலைவணங்கி நிற்கிறேன். பணியுங்கள்.

**கைகேயி:** இதை நான் சொல்லவில்லை, உன் தந்தையின்

**இராமன்:** ஆணை; சிரமேல் தாங்கிப் பணிபுரிவேன்.

**கைகேயி:** இந்த உலகைப் பரதனே ஆளவேண்டும். தாழ் இரு சடைகள் தாங்கி நீ தவம் மேற்கொள்ள வேண்டும். கானகம் நண்ணிப் புண்ணிய நதிகள் ஆடி ஏழிரண்டு ஆண்டு அதாவது.

**இராமன்:** பதினான்கு ஆண்டுகள்.

**கைகேயி:** கழித்து உடனே வந்துவிடு. அவ்வளவுதான்.

**இராமன்:** மிக்க மகிழ்ச்சி. இதைவிட உயர்ந்த செய்தி எனக்கு எப்பொழுதும் யாரிடமும் கிடைக்காது. அது உங்களிடம்தான் கிடைக்கும். உங்களால் தான் சொல்ல முடியும்.

**கைகேயி:** சித்திரம் போல் விளங்கும் உன் திருமுகம் அன்றலர்ந்த செந்தாமரைபோல் மலர்ந்து விளங்குகிறது. நீ நல்லவன். சொன்னபடி செய்வாய். இதைவிட மகிழ்ச்சி தருவது வேறு ஒன்றும் இருக்கமுடியாது. அஃது எனக்கு ஒருத்திக்குத்தான் தெரியும். வண்டியில் பூட்டிய எருதை அவிழ்த்துவிட்டால் எருதுக்கு மகிழ்ச்சிதானே உண்டாகும்.

**இராமன்:** அருளுடை உங்கள் செயலை எண்ணி எண்ணிப் பார்க்கிறேன். தாய்க்குத்தான் பிள்ளையின் துன்பம் தெரியும். இப்பொழுதுதான் நீங்கள் உண்மையான தாய் என்பதை உணர்கிறேன். பாரத நாடு உங்களை வழிவழியாகப் போற்றும்; வணங்குகிறேன். மன்னவன் பணியென்று கூறத் தேவையில்லை. உம் பணி என்று கூறினால் மட்டும் மறுத்து விடுவேனோ? என் பின்னவன் பெற்றசெல்வம் நான் பெற்ற செல்வம் அன்றோ? மின்னொளிர் கானம் இன்றே போகின்றேன். விடையும் கொள்கின்றேன்.

*(இராமன் வெளியேறுதல்)*

கைகேயி: (தனி மொழி) உண்மையில் இவன்தான் கடமை வீரன், அரிய செய்தியை எவ்வளவு எளிமையாக எடுத்துக் கொண்டான். இந்த உள்ளம் அவருக்கு இருந்தால்..... வயதானவர்களுக்கே பற்றுகள் அதிகம். அவர்கள் நினைப்பது போல்தான் உலகம் நடக்க வேண்டும் என்று கருதுகிறார்கள். உலகம் அவர்களை மீறி வேறுவழியில் செல் கிறது. இவர்களைத் தூக்கி எறிந்தவிடுகிறது.

## காட்சி 6

**தசரதன், கைகேயி, கூனி, வசிட்டர். கோசலை.**

கூனி: என்ன? எல்லாம் வெற்றியா?

கைகேயி: எதைக் கொண்டு வெற்றி தோல்வி கணக் கிடுவது? வரத்தைக் கொண்டேன்; அவர் வருந் திக் கொடுத்தார்..

கூனி: எப்படியோ ஒன்று. இராமன்...

கைகேயி: அவன் புறப்பட்டுவிட்டான்.

கூனி: இந்தக் கிழவர்.

கைகேயி: புறப்படவில்லை. அழுது அழுது தேம்புகிறார். அவரைப் புரிந்துகொள்ளவே முடியவில்லை. என்ன முழுகிவிட்டது. இருவரும் அவருடைய மக்கள் தானே! யார் ஆண்டால் என்ன? என் மகன் முதலிற் பிறந்திருந்தால்.

கூனி: பற்று; மூத்தவன்தான் வரவேண்டும் என்ற விடாப்பிடியான எண்ணம்.

கைகேயி: பிள்ளைக்கு இருக்கிற அறிவுகூட இந்தக் கிழவ ருக்கு இல்லையே!

**கூனி:** பழமையில் ஊறியவருக்கு ஒரு சிறு புதுமையை யும் தாங்க முடியவில்லை.

**கைகேயி:** மகன் காட்டுக்குப் போவதை இவரால் தாங்க முடியவில்லை. இவர் மட்டும் காட்டுக்குப் போகி றேன் என்று என்னை மருட்டலாமா? இப்பொ ழுது போகட்டுமே, அவனோடு!

**தசரதன்:** சுடுகாட்டுக்குத்தான் போகவேண்டும். உன்னைச் சொல்லிக் குற்றம் இல்லை. நீ சொல்லுகிறாயே அந்தப் பற்றைத்தான்.

**கைகேயி:** எனக்கும் பற்றுத்தான் இவ்வாறு கேட்கச் சொல் லியது. யாராவது ஒருவர் விட்டுக் கொடுக்க வேண்டியதுதானே.

**கோசலை:** (வருதல்) என் மகன் யாருக்குத் தீமை செய்தான்? பரதன் ஆளட்டுமே. நானா வேண்டாம் என் கிறேன். இராமன் காட்டுக்குப் போகாமல்,

**வசிட்டன்:** விதி வலி கடத்தல் முடியாதம்மா.

**தசரதன்:** அழாதே! எல்லாம் ஊழ்வினைப்படிதான் நடக் கும். அது ஒரு தனிக்கதை.

## காட்சி 6 (அ)

(தசரதனின் இளைய பருவ நாள்களில் ஒரு நிகழ்ச்சி. வில்லைத் தாங்கி வேட்டைமேல் செல் கிறான்; கரையில் நின்று நீர் நிலையைப் பார்க் கின்றான். தந்தையும் தாயும் குருடர்கள்; அவர் களுக்குத் துணையாக அவன் மகன் வழிகாட்டிச் செல்கின்றான்)

**முதியோன்:** மகனே! நீ நீர் மொண்டு வா. வேட்கை

தணிவுறும்.

மகன்: நீரா! இதோ வருகிறேன் (நீர்மொள்ளல்; குடு குடு என ஒலி)

தசரதன்: யானை நீர் குடிக்கும் ஒலி! பார்க்காமலே அம்பு எய்யலாம். அருகில் சென்றால் ஓடி விடும். (அம்பு எய்கிறான்)

மகன்: ஆ! அப்பா! அம்மா! இனி யார் உங்களுக் குத் தண்ணீர் கொடுக்கப் போகிறார்கள்.

குரல்; தண்ணீ! தண்ணீர்!

தசரதன்: (ஓடோடி வருகிறான்) ஆ! என்ன காரியம் செய்துவிட்டேன். தண்ணீரா வேண்டும்? இதோ.

மகன்: எனக்கல்ல. எனக்காகக் கண்ணீர் விடப்போ கும் என் பெற்றோருக்கு.

தசரதன்: கண்ணீர் விடுவோர்க்குத் தண்ணீர்.

மகன்: கண்ணிழந்த அம்முதியவரின் கண்ணீரை இனி யார் நிறுத்தமுடியும்? அவர்களுக்குத் தான் இந்தத் தண்ணீர். குடிக்க எடுக்க வந்தேன்.

தசரதன்: அவர்கள்.

மகன்: அங்கே நான் இறந்த செய்தியும் தெரியாது. எனது துன்பவேதனையை அவர்கள் காண முடியாத பேறு பெற்றோர். அவர்களுக்கு இந்தத் தண்ணீரைக் கொண்டுபோய்க் கொடுங்கள். அது செய்தால் போதும்.

தசரதன்: நான் தெரியாமல்....

*மகன்:* *தெரிந்து யார் தவறு செய்வார்கள், விதி.*

*தசரதன்:* *விதி; அவர்கள் கதி.*

## காட்சி: 6 (ஆ)

**தசரதன்: தண்ணீர் (கையில் பாத்திரத்தில் ஏந்தி)**

*முதியவன்:* *மகனே! உன் குரலே மாறிவிட்டதே. வாங்கிக்கொள்கிறார். (தடவிப் பார்த்து) என்ன உன் கை இவ்வளவு முரட்டுத்தனமாக இருக்கிறதே.*

*தசரதன்:* *முரடன்தான். அதுமட்டுமா குருடனும்தான்*

*முதியவன்:* *மூவரும் குருடர்களாகிவிட்டோம்.*

*தசரதன்:* *நான் கண்ணிருந்தும் குருடன்.*

*முதியவன்:* *விழி இழந்த முதியவர்கள்*

*தசரதன்:* *அறியாது நடந்துவிட்டது; யானைதான் நீர் குடிக்கிறது என்று உன் மகனை,*

*முதியவன்:* *என் மகனை.*

*தசரதன்:* *அம்பால் எய்துவிட்டேன். அவன்,*

*முதியவன்:* *கண்ணிழந்தானா? ஐயோ!*

*தசரதன்:* *கண்ணிழக்கவில்லை. அவனையே நீங்கள் இழந்துவிட்டீர்கள். உயிர் இழந்தான்.*

*முதியவன்:* *ஐயோ! இப்பொழுதுதான் நாங்கள் விழி போனவரானோம். ஐயா! இருளில் ஆழ்த்தி விட்டாயே. எங்கள் கண்ணே நீ மட்டும்.*

*தசரதன்:* *விண்ணை அடைந்துவிட்டான். நான்....*

**முதியவன்:** நீ யாராக இருந்தாலும் சரி உனக்கும் இந்தக் கதி வந்துதான் தீரும். எங்களைப்போல் மகனைப் பிரிந்து துடித்துச் சாக வேண்டும்.

## காட்சி:6 (இ)

### தசரதன, கைகேயி

**தசரதன்:** துடித்துச் சாக வேண்டும். இது அவர்கள் இட்ட சாபம்.

**கைகேயி:** உன் மனச்சான்று உன்னையே கொல்கிறது. நீ செய்த பழி உன்னை அழிக்கிறது. கொலைப்பழி விடாது.

**தசரதன்:** அதற்கு நீ.

**கைகேயி:** என்னைப் பழிக்கிறாய்; என்மீது பாரத்தைப் போடுகிறாய்; உலகம் என்னைப் பழிக்கட்டும் என்று எதிர்பார்க்கின்றாய்: பெண்ணினத்தையே பழிக்கு ஆளாக்குகின்றாய்.

**தசரதன்:** பேசத் தெரிந்திருக்கிறாய்.

**கைகேயி:** பெண்களை அடிமைப்படுத்தி ஆட்டிப் படைக்க நினைப்பது தவறு. அவர்கள் உண்மையைச் சொன்னால்.....

**தசரதன்:** என்னால் பொறுக்கமுடியாது; ஏடுகள் உன்னைப் பழிவாங்கியே தீரும். கவிஞர்கள் உன்னைத்தான் கொலையாளி என்று சொல்லுவார்கள். நாடே உன்னால் விளைந்த கொடுமை என்றுதான் பேசும். உனக்கு யாரும் பரிந்து பேசமாட்டார்கள்.

**கைகேயி:** நான் கலங்கவில்லை. வாய்மை வெல்லும்.

அதுதான் நான் உங்களிடம் கற்றுக் கொண்ட பாடம்.

**தசரதன்:** வாய்மை வெல்லும்; வாய்மை வெல்லும். அதுதான் வெல்கிறது. நான் அழிகின்றேன்.

**கைகேயி:** அதற்காகக் கவலைப்படக் கூடாது. எந்த வாய்மையைப் போற்றி வருகிறீகளோ அது தான் இறுதியில் வெல்லும். தாங்கள் அளித்த இரண்டு வரங்களே வெல்லும்.

**தசரதன்:** ஆனால்,

**கைகேயி:** ஆனால், என்ன எது ஆனாலும் பார்த்துக் கொள்ளலாம்.

**தசரதன்:** தசரதன் அதற்குப் பலியாகப் போகிறான்.

**கைகேயி:** நானும் வருத்தப்படுகிறேன்; லட்சியப் பாதயில் செல்கின்றவர் வருத்தப்படுவார்களே தவிரத் திரும்பி அடி எடுத்து வைக்க மாட்டார்கள்.

## காட்சி 7

### இராமன், சீதை, இலக்குவன்

*இராமன்:* என்ன! எல்லாம் எடுத்து வைத்துக் கொண்டாயா?

*சீதை:* இன்னும் கொஞ்சநேரம். தலையைச் சரியாகவே வாரிக் கொள்ளவில்லை,

*இராமன்:* வாரவே முடியாது. சரியாக வாரிக்கொண்டேன் என்று எந்தப் பெண்ணும் சொல்ல மாட்டாள். சொல்ல முடியாது. நீ வர வேண்டியதில்லை.

*சீதை:* ஏன்? எனக்கு.....

*இராமன்:* இல்லை. உனக்குப் பாதி இடம் இல்லை.

*சீதை:* அப்பொழுது சிம்மாதனத்தில் பெண்கள் இருக்கக்கூடாது என்று யாராவது புதுச்சட்டம்—

*இராமன்:* மனைவி பேச்சைக் கேட்டு ஆட்சி நடத்துகிறேன் என்பார்கள்.

*சீதை:* அப்பொழுது எனக்கு அங்கு உட்கார உரிமையே இல்லையா?

*இராமன்:* பதினான்கு ஆண்டுகள் கழித்துத்தான் கிடைக்கும்.

*சீதை:* கிழாவியானபிறகு. அப்பொழுது யாரும் உட்கார விரும்பமாட்டார்கள். உட்கார்ந்நாலும் அழகாக இருக்காது. உட்கார வேண்டிய அவசியம் ஏற்படாது.

*இராமன்:* பதினான்கு ஆண்டுகளிலேயே கிழவியாகி விடுவாயா? ஆகமாட்டாய்.

| | |
|---|---|
| **சீதை:** | தாயாவது ஆவேன். |
| **இராமன்:** | தாய்! நினைக்கவே அச்சமாக இருக்கிறது. நீயும் நாளைக்கு இப்படித்தான் மாறுவாய். |
| **சீதை:** | மாறாமல் இருக்க முடியுமா? |
| **இராமன்:** | மகனுக்காகப் போராடி என்னை. |
| **சீதை:** | காட்டுக்கு அனுப்புவேன்; ஆட்சியை அவனுக்குக் கொடு என்பேன். |
| **இராமன்:** | உண்மையாகவா! |
| **சீதை:** | இது என் கற்பனை. நீங்கள் ஆள்வதைவிட என் மகன் ஆளும் நாள்தான்.... |
| **இராமன்:** | பொன்னாள். நன்னாள். ஒவ்வொரு தாயும் இப்படித்தான் கற்பனை காண்பாளா? தாயின் உள்ளம். |
| **சீதை:** | இதில் என்ன தவறு இருக்கிறது? அதுவரை நீங்கள் ஆண்டு செம்மையாக மகனிடம் கொடுக்க வேண்டும் என்ற ஆசையால்தான் இந்த எண்ணம் எழுகிறது. ஒவ்வொரு பெண்ணும் எதிர்காலக் கனவில் மகனைக் காண்பாளே தவிரக் கணவனையே நினைத்துக் கொண்டிருக்க மாட்டாள். |
| **இராமன்:** | அப்பொழுது நீயும் ஒரு.... |
| **சீதை:** | பெண். |
| **இராமன்:** | இல்லை, தாய்; பெண் குலமே தாய்க்குலம் என்ற உண்மையை இப்பொழுதுதான் உணர்கிறேன். என் சிற்றன்னை ஒரு சிறந்த தாய். |
| **சீதை:** | யார் இல்லை என்றது. அவளைப் போல் |

பரிவும் பாசமும் கொண்டவர்கள் நான் கண்டதே இல்லை.

இராமன்: அவள் தன் மகன் ஆட்சிக்கு வரவேண்டும் என்கிறாள்.

இலக்குவன்: (இடையில் வருதல்) இது பொறுக்க முடியாது!

இராமன்: அண்ணன் சொல்கிறேன். சினம் அடங்கு அடக்கு. பெரியவர்களுக்குத் தெரியாதா? எது நல்லது என்று அவர்களுக்குத் தெரியும்.

இலக்குவன்: அவர்களுக்கு எது நல்லது என்று தெரியும். நமக்கு.

இராமன்: அப்பொழுது தன்னலத்தால் நீ பேசுகின்றாய் என்று தெரிகிறது. நான்தானே காட்டுக்குப் போகின்றேன். நீ ஏன் துடிக்கின்றாய்?

இலக்குவன்: நீர் தனியாகவா?

இராமன்: பின் என்ன இந்த நாட்டு மக்கள் அத்தனை பேரையும் அழைத்துக் கொண்டா? நீ இங்கேயே இரு. நாட்டில் குழப்பம் இல்லாமல்,

இலக்குவன்: எனக்குக் குழப்பமில்லாமல் முதலில் இருக்க வேண்டுமே!

(சீதை வற்கலை உடுத்தி வருகிறாள்)

சீதை: புறப்பட்டு விட்டேன்.

இராமன்: உன்னைச் சொல்லவில்லையே. என்னைத் தான் போகச் சொன்னார்கள்.

சீதை: நானும் ஒரு தாய்; என் மகன் பதினான்கு ஆண்டுகள் கழித்துப் பட்டத்துக்கு வர வேண்டும். உம் அன்னைக்கு இருக்கும்

உணர்ச்சி எனக்கு இருக்காதா.

இராமன்: இப்போது

சீதை: தாய் ஆகவில்லை. தாய்மையைப் பெறவேண்டும்

இராமன்: அது

சீதை: அது!அது!அது!

இராமன்: புரிகிறது! புரிகிறது! புரிகிறது!

இலக்குவன்: அது காடு.

சீதை: இது சுடுகாடு

இராமன்: அப்பொழுது

இலக்குவன்: மூன்று பேரும் போகிறோம். இதுதான் முடிவு.

இராமன்: ஒரு கல்லில் மூன்று காய்.

இலக்குவன்: சேர்ந்துதான் விழும்.

இராமன்: நாம் தாயர்தம் ஆசி பெற்றுப் பிறகு போவோம் காடு.

## காட்சி 8

### கூனி, கைகேயி

கூனி: எப்படி என் திட்டம்?

கைகேயி: உனக்கும் எனக்கும்தான் புரிகிறது. இந்த உலகம் புரிந்து கொள்ளவில்லை; புரிந்து கொள்ளாது.

கூனி: என்னைச் சூழ்விளை நிறைந்தவள் என்று காவியமே படைத்து விடுவார்கள்.

| | |
|---|---|
| கைகேயி: | நான் கணவனைக் கொன்றவள் என்று பழி சூட்டும். |
| கூனி: | கொலை செய்வாள் பத்தினி. |
| கைகேயி: | அதோ பார், இந்த நாட்டு மக்கள் என்ன பேசுகின்றார்கள். |
| ஒலி: | 'அந்தக்கூனி இருக்கிறாளே அவள்தான் சொல்லிக் கொடுத்திருக்க வேண்டும்.' |
| | 'வேண்டும் தசரதனுக்கு! கைகேயியே கதி என்று கிடந்தானே.' |
| | 'இராமன் காட்டுக்குப் போவதை நாம் யாரும் ஏற்றுக் கொள்ள முடியாது; நாம் அனைவரும் உடன் போக வேண்டியது தான்.' |
| | 'தசரதன் பிழைக்கமாட்டான் என்று சொல்லுகிறார்களே.' |
| | 'இதயத் தாக்குதல்' |
| | 'மன அதிர்ச்சி' |
| | 'எப்படி ஐயா பிரிவைத் தாங்க முடியும்?' |
| | 'மகன் பாசம் சும்மா விடுமா?' |
| கூனி: | யாராவது ஒருவர் நம்மைப் புகழ்வார்களா என்று பார்க்கிறேன். |
| கைகேயி: | அந்த அளவுக்கு ஞானம் வரவில்லை என்பது பொருள். |
| கூனி: | கவிஞர்கள். |
| கைகேயி: | ஊரோடு சேர்ந்து போனால்தான் அவர் |

களுக்குப் பிழைப்பு.

**கூனி:** நம்மை எதிர்காலம்.

**கைகேயி:** ஏதாவது கூறும். நம்மைத் தூற்றுவார்கள். மன்னனைப் பாராட்டுவார்கள்.

**கூனி:** அப்படி நம்மைத் தூற்றினால்தான் காவியம் வாழும். உலகத்தோடு ஒத்துப் போகவில்லை என்றால் அவர்கள் கவிதை உடனே சரிந்து விழுந்து விடும். காவியத்தில் நாம் இருவரும் பண்பிழந்த கொடியவர்கள்; கயமை நிறைந்த படைப்பாகப் படைத்துக் காட்டு வார்கள்.

**கைகேயி:** கவிஞர்கள் தீட்டி எழுதுவதற்கு நாம் சரியான படைப்பு,

**கூனி:** இந்த நாட்டில் பெண்மையைப் பழிப்பதற்கு உன்னைத்தான் பயன்படுத்தப் போகிறார்கள்.

**கைகேயி:** பொதுவாகக் கவிஞர்கள் ஆண்களாக இருப்பதால்தான்.

**கூனி:** பெண்களும் ஆண்மனமே பெற்றிருக்கி றார்கள். அவர்கள் மட்டும் பெண்ணுள்ளத்தை எங்கே கண்டு பேசப் போகிறார்கள்.

**கைகேயி:** அவர்கள் அப்படியே என்னை மாற்றிக் காட்டி விடுவார்கள். நீயே பார். நம் வாழ் நாளுக்குள் ஒரு மகா காவியமே எழுதி விடுவார்கள். அவர்கள் தீட்டும் சித்திரமே வேறு விதமாக இருக்கும்.

## காட்சி 9

### இலக்குவன், சுமத்திரை, இராமன்

**இலக்குவன்:** *தாயே வணக்கம்; நான்*

**சுமித்திரை:** *தெரியும். இராமனோடு போகவிரும்புகிறாய்; போ. அதுதான் என் ஆணை; நானே விரும்புவது. அவ்வனம்தான் உனக்கு இனி அயோத்தி; இராமன்தான் உனக்கு மன்னவன். சீதைதான் உன் தாய். இதை மனத்திற்கொண்டு நீ போவதுதான் நல்லது: நான் விரும்புவதும் அதுவே.*

**இலக்குவன்:** *தங்கள் விருப்பம்தான் என் விருப்பம் தங்கள் அறிவுரைக்கு...*

**சுமித்திரை:** *நன்றி என்று சொல்லப் போகின்றாய். இராமன் பின்னே செல்வது தம்பி என்னும் தன்மையால் அல்ல;அடியவரைப்போல் நின்று ஏவல் செய்ய வேண்டும். மீண்டும் நகருக்கு இராமன் வந்தால் நீ வா. இல்லாவிட்டால் முதலில் உன்னை முடித்துக் கொள். (கண்களில் நீர் கலங்க நிற்கிறாள்.) (இராமனும், இலக்குவனும் தொழுது நிற்கின்றனர்.)சென்று வாருங்கள்.*

## காட்சி: 10

### இராமன், இலக்குவன், வசிட்டர்

*(இலக்குவனும் வற்கலை உடுத்தி இராமனோடு செல்கிறான்)*

**இராமன்:** *தம்பீ! அன்னையைப் பார்த்ததும் என் மனம் .*

**இலக்குவன்:** *துடித்து இருக்கும்.*

**இராமன்:** அதுதான் சொல்லவந்தேன், அன்னையர் மூவரும் மன்னவனும் முன்னைய நிலையில் இல்லை. வெந்துயரில் மூழ்கியுள்ளனர். என்னையும் பிரிந்தனர். இவர் இடர் உறாதபடி உன்னை என் பொருட்டு உதவ வேண்டும். இதுதான் வேண்டுவது.

**இலக்குவன்:** (திடுக்கிட்டு) நான் தங்களுக்குச் செய்த பிழை யாது? தண்ணீர் இருந்தால்தான் குளத்தில் மீனும் குவளையும் வாழும். மண் உலகம் இருந்தால்தான் உலகத்து உயிர்கள் வாழும். அதேபோலத்தான் நீ இங்கே இருந்தால்தான் நானும் அண்ணியும் வாழமுடியும் மீனும் குவளையும் நீரை விட்டுப்பிரிந்து வாழ முடியும் என்றால் நாங்களும் வாழ முடியும்.

கானகம் அனுப்பிவைத்த தசரதனின் மகன் நான் என்பதற்காக இந்தத் தண்டனையைக் கொடுக்கின்றாயா? தசரதன் மகன் என்பது தான் நான் செய்த குற்றம்.

என்னைச் சினம் தணிக என்று முன் கூறிய சொற்களை விட நீ இங்கேயே தங்கிவிடு என்று கூறும் சொல்லே மிகவும் கொடியது.

(இராமன் கண்களைத் துடைத்துக் கொள்கிறான்)

**வசிட்டர்:** (வருதல்) (இராம இலக்குவர் வணங்க அவர்கள் முகத்தையும் புதிய கோலத்தையும் உற்று நோக்கல்)

வாழ்வைத் தரும் மங்கலநாளிலே தாழ்வைத்தரும் கட்டளையைப் பெற்று நிற்கின்றீர்கள். எல்லாம் விதியின் செயல். சூழ்வினை.

இலக்குவன்: சூழ்வினையை ஒட்டித்தான் ஊழ்வினை இடம் பெறுகிறது.

வசிட்டர்: இன்னும் ஊழ்வினை எவ்வாறு சூழ்வினை யாக மாறப்போகிறது என்பதை உணர்த்தவே வந்தேன். செங்கோல் ஏந்தி அரியணை அமரவேண்டிய நீ விற்கோல் ஏந்தி வெங் கான் அடைந்தால் தசரதன் உயிர் பிரியும் என்ற செய்தியைத்தான் அறிவிக்க வந்தேன்.

இராமன்: ஐயா! மன்னவன் பணியைத் தலையேந்தி ஆற்றுதல் எனது கடமை. அதை உணர்கி றேன். அவர் இடரை நீக்குதல் உமது கடமை. கடமை மட்டும் அன்று நெறியும் ஆகும்.

வசிட்டர்: அரசன் ஆய்வு இல்லாமல் கொடுத்த வரம் அது. அவன் உள்ளம் விரும்பிக் கொடுத்த கட்டளை அல்ல. சொல் வலையில் சிக்கிப் பேசிய வெறும் சொல்லேதவிர, அவர் கட்டளை என்று கூறமுடியாது. அரசவை யில் அவர் சொல்லியிருந்தால்தான் அது கட்டளை என்று கொள்ள முடியும்.

இராமன்: இது வாதமே தவிர நெறியல்ல. எம் தந்தை கொடுத்தது வரம். ஈன்ற அன்னை ஏவினாள். யான் அதைச் சிரமேல் தாங்கி இயற்று கின்றேன். அறநெறி பிறழாத நீரா இதைத் தடுக்க வேண்டும். அவர் உயிர் போகாமல் தடுப்பது என் செய்கையில் இல்லை. அது உங்கள் சொல்லில்தான் உள்ளது. என்னைத் தான் காடு ஏகச் சொல்லி வரம் கேட்டார் களே தவிர.

வசிட்டர்: இவரைச் சுடுகாடு ஏக வரம் கொள்ள வில்லை. சரியான வாதம்தான். அவர்

சாவதில் பொருத்தம் இருப்பதாகத் தெரிய வில்லை. சோகம்தான் அவர் உயிரைப் பிரித்துவிடும்.

**இராமன்:** அதன் வேகத்தை அடக்குவது தங்கள் கடமை; அதைச் செய்து முடியுங்கள்.

**வசிட்டர்:** மன்னன் இடரை நீக்குதல் என் கடன். உண்மைதான். முயல்கிறேன். வெற்றி பெறுவேன் என்று கூறமுடியாது. இந்த நாட்டில் ஒவ்வொருவரும் தன் கடமை உணர்ந்து செயலாற்றுவர். வசிட்டனும் தன் கடமையினின்று நழுவமாட்டான்.

## காட்சி: 11

### இராமன், சீதை

**இராமன்:** மறுபடியும் சொல்கிறேன் கேள். நான் மட்டும் செல்கிறேன். என்னைத்தான் போகச் சொன்னார்களே தவிர

**சீதை:** உன்னைத்தான் என்று சொல்லவில்லை. என் அத்தான் என்னத்தான் சொன்னாலும்

**இராமன்:** கல் தடம் கண்டு நான் வருவேன்; நீ வருந்தாதே நில்

**சீதை:** நில் இந்தச் சொல் ... நீ வருந்தாதே. நில் இதுவா சொல். அன்னை சொல்லுக்கு மதிப்புக் கொடுத்து ஆணை ஏற்று நடக்கின்றீர். நானும் பெண்தானே. என் சொல் கேட்டு என்னையும் உம்மோடு வர இடம் கேட்கின்றேன். நான் மட்டும் என்ன தங்களுக்குச் சுமையா? பட்டுப்புடவை

கேட்பேன் என்று எண்ணுகிறீரோ? இதோ இந்த வற்கலையே போதும்.

**இராமன்:** கல்லும் உருகும் காட்டில் செல்வது முடியுமா? சிந்தித்துப்பார். உன் மெல்ல டிகள் அதில் மேவுமா? நினைத்துப்பார்.

**சீதை:** நினைத்துப் பார்க்கின்றேன். ஒன்று கேட்கி றேன். சொல்ல முடியுமா உங்களால். அந்த வழி எவ்வளவு சுடும்?

**இராமன்:** சுடும்.

**சீதை:** உங்களைப் பிரிந்து வாழும் பிரிவைக் காட்டிலுமா சுடும்?

## காட்சி : 12

### வசிட்டர், கைகேயி

**வசிட்டர்:** எண்ணிப்பார். உன் வாய்மொழி என்ன விளைவித்திருக்கிறது.

**கைகேயி:** விளைவை எண்ணித்தானே வரம் கேட்டது. மன்னன் வாய்மையினின்று தவறான். நானும் சொன்ன சொல்லை மாற்றேன். கேகயன் மகளும் வாய்மையினின்று பிறழாள்.

**வசிட்டர்:** ஒரு பக்கம் இராமன் நடுக்காட்டை நோக் கிச் செல்கிறான்; மற்றொரு பக்கம் மன்னவன்.

**கைகேயி:** இடுகாட்டை நோக்கிச் செல்கிறான். அதைத் தானே சொல்லப் போகிறாய். சொல்லி முடி.

**வசிட்டர்:** உயரத்திலிருந்து கீழே உருண்டு விழுகிறாய். உயரமான நிலையில் நிற்கமுயல்; படுகுழி

யில் விழப் போகிறாய்!

**கைகேயி:** நான் உயரத்தில்தான் நிற்கின்றேன். நீங்கள் தான் சரிந்து கீழே விழுகின்றீர். மெதுவாக விழுந்தால் அடிபடாது.

**வசிட்டர்:** இல்லாத மரபைப் படைக்கின்றாய். மூத்தவன் இராமனுக்கு அரசை நல்கிவிடு. உன் கண வன் உயிரும் நிற்கும். இதுதான் மனுநெறி, முன்னையோர் நெறியும். அப்பொழுதுதான் நீ புகழைப் பூணுவாய்.

**கைகேயி:** மன்னவருக்காக மன்றாடும் மாண்புடையீர்! நானா இராமனைக் காட்டுக்குப் போ என்றேன். மன்னவன் வாய்மொழி. மறக்க வேண்டாம். நானா சாகச் சொல்கிறேன். அவரே அந்த வாய்மையைக் காப்பாற்ற முடியாமல் வேதனைப்படுகின்றார் ஒன்று மட்டும் உறுதி. வாய்மை பிறழ்ந்து என் வரத்தைப் பொய்யாக்கினால் கேகயன் மகள் உயிர் வாழாள். மன்னவனை மயக்கிப் பொய் யனாக்கிவிடலாம் உங்கள் சட்டங்களைக் காட்டி .என்னை மட்டும் பொய்ப்பிக்க ஆயிரம் வசிட்டராலும் முடியாது. என் இரண்டு வரமும் செயல்பட வேண்டும்; இல்லையெனில் நான் மடிந்து விடுவேன்.

**வசிட்டர்:** நான் சொல்லுகிறேன். உன் கணவன் இறப்பான்; உலகம் உன் போக்கை ஏற்காது; பழி நின்று நிலைபெறும். பாவமும் உண்டாகும். இதற்குமேல் நான் என்ன கூறமுடியும்?

**கைகேயி:** கூறத் தேவையில்லை. இதைத் தவிர வேறு உமக்குப் பேசவும் தெரியாது.

**வசிட்டர்:** நீ பெண்ணா! தீயா! பேயா!

**கைகேயி:** நாயா! ஏதாவது குழப்பம் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. வயது ஆகிவிட்டாலே குழப்பம் ஏற்படுகிறது.

**வசிட்டர்:** மன்னவன் மாண்டதும் மண்ணுலகில் நீ வாழ முடியுமா? எண்ணிப்பார்.

**கைகேயி:** என்னைப்பற்றி நானே கவலைப்படாமல் இருக்கும்பொழுது நீர் ஏன் கவலைப் படுகின்றீர்?

**வசிட்டர்:** இப்பொழுது ஒன்று கேட்கிறேன். இதற்கு மட்டும் விடை கொடுத்தால் போதும். மன்னன் மகனைப் பார்த்துத் தன் வாயால் போ என்று சொன்னானா? நீயேதான் சொன்னாயா?

**கைகேயி:** மன்னன் கட்டளையை மனைவி கூறக்கூடாது என்று சட்டம் ஏதாவது இருக்கிறதா?

**வசிட்டர்:** அதைத்தான் சொல்ல வந்தேன். அரசியலையே உங்கள் சொந்தக் குடும்பச் செய்தியாக ஆக்கி விட்டீர்கள்.

**கைகேயி:** ஆக்கினால்?

**வசிட்டர்:** அது முறையல்ல; நெறியாகாது; தசரதன் தங்களிடம் சொல்லி இருக்கலாம் மறுக்கவில்லை. மன்னன் அவையில் வந்து சொல்லி இருக்க வேண்டும். இதுதான் என் வாதம்; அந்தக் கிழவரை நேரில் சென்று பார்த்துக் கேட்டு வருகிறேன். (வெளியே செல்கிறான்)

**கைகேயி:** இது என்ன இந்த வசிட்டருக்கு.

கூனி: (நுழைதல்) வேலை இல்லை. சாமி வரம் கொடுத்தாலும் பூசாரி வரம் கொடுக்க மாட்டார்.

கைகேயி: அது உண்மைதானே. வசிட்டர் தம் விருப்பமாக எதுவும் நடக்க வேண்டும் என்று நினைக்கிறார். அரசியலில் அவரும் விளையாடிப் பார்க்கின்றார். நமக்கு எதி ராகத் திட்டம் தீட்டுகிறார். போகப் போகப் பார்க்கலாம்.

## காட்சி : 13

### இராமன், கோசலை

இராமன்: தாயே!

கோசலை: தெரியும். பரதன் ஆளவேண்டும் என்பது. நல்லது பரதனே ஆளட்டும்.

இராமன்: காட்டுக்குச் சென்று....

கோசலை: இதுதான் கொடுமை. உன்னை மாநிலம் தாங்கு என்று கூறியது வஞ்சமோ நஞ்சமோ. என் ஆருயிர் அஞ்சுகிறது. இனி நான் உயிர் வாழமாட்டேன். உன்னைப் பிரிந்து நான் உயிர் வாழமுடியாது.

இராமன்: வருந்துவதால் பயன் என்ன? மெய் பேசும் மன்னனைப் பொய்யனாக்க விரும்புகிறாயா? மன்னன் இட்ட கட்டளையில்உள்ள மாசு யாது? சிறந்த தம்பி திரு உறுகின்றான். வனத்திடை உறைந்து தவம் செய்யும் பேறு கிடைத்திருக்கிறது.

உங்கள் கண்ணீரைத் துடைக்க நான்

போகாமல் இருக்க முடியாது. விண்ணும், மண்ணும், கடலும், காற்றும் தம் நிலை மாறினாலும் தந்தைசொல் மீறி நடக்க என்னால் முடியாது. இது தெரிந்தும் தாங்கள் மனவேதனைப்படுவது வீண்.

**கோசலை:** அரசன் ஆணையை நீ மறுக்க வேண்டும் என்று நான் கூறவில்லை. ஒன்று நீ பிரிந்தால் என் உயிர் பிரியும். நான் வாழவேண்டும் என்று நினைத்தால் என்னையும் உன்னோடு அழைத்துச் செல். இதுவாவது செய்.

**இராமன்:** என்னை நீங்கித் துன்பத்தில் ஆழ்ந்துள்ள மன்னனைத் தேற்றுவது யார்? என்னோடு நீ வந்துவிட்டால் உன் கடமையிலிருந்து நீ வழுவுகின்றாய். அறம் பார்க்க வேண்டாமா? எத்தனை ஆண்டுகள் இருக்கின்றன. நீ திகைக்க வேண்டியதில்லை. பத்தும் நாலும் தானே.

**கோசலை:** நாட்டு ஆட்சி பரதனுக்கே போகட்டும். நான் மறுக்கவில்லை. மன்னனை மன்றாடுகிறேன். உன்னைப் போகாமல் நிறுத்துகிறேன். இது தான் நான் செய்யத் தகும் முயற்சி.

**இராமன்:** முயற்சியைப் பற்றி நான் பேச விரும்பவில்லை. மன்னன் அயர்ச்சியைப் போக்க வேண்டியது உன் கடமை. நான் சென்று வருகிறேன்.

## காட்சி 14

### வசிட்டர், தசரதன், கோசலை, கைகேயி

*(தசரதனைத் தண்ணீர் தெளித்து மூர்ச்சை தெளிவிக்க முயல்கிறார் வசிட்டர். மன்னன் எழவில்லை.)*

**வசிட்டர்:** இராமன்; வள்ளல் இராமன் உன் மைந்தன்.

**தசரதன்:** இராமன்! (பிதற்றி... எழுகின்றான்)

**வசிட்டர்:** எழுங்கள். இராமன் காட்டுக்குப் போக மாட்டான். அவனே நாடாள்வான். கேகயன் மகளும் மனம் இரங்குவாள். அப்படி அவன் காட்டுக்குப் போனால் நாங்கள் மட்டும் உயிர் வாழ்வோம் என்று நினைக்கின்றாயா?

**தசரதன்:** இராமன் மீண்டும் வருவானா? அவன் நாடாள முடியுமா? நான் உயிர் விடுமுன் அவனைத் திருமுடி அணிவித்து நான் காண வேண்டும். ஆனால் என் வாயுரையும் பொய்க்காத வண்ணம் நீ காத்தல் வேண்டும்.

**கோசலை:** மன்னா! கேகயன் மகள் மிகவும் நல்லவள். சொன்னால் கேட்பாள், அப்படி அவள் இசையாவிட்டாலும் பரதன் வந்ததும் அவனைக் கொண்டு சரி செய்து விடலாம்.

**தசரதன்:** பரதன், அவன் எனக்கு மகனே இல்லை. அவன் முகத்திலும் விழித்துப் பார்க்கமாட்டேன். அவனைப் பார்ப்பதற்கு முன் நான் உயிர் விடுவேன். அந்தக் கொடியவனைப் பாரேன். அவனைப் பெற்றெடுத்த அந்தக் கொடியவளையும் இனிப் பார்க்கமாட்டேன். பரதனை வரவழைக்க வேண்டாம்.

கைகேயி: (நுழைந்து) பரதனை வரவழைக்க வேண்டும் முதலில் இராமன் காட்டுக்குப் போக வேண்டும். அது முதலில் நடந்து தீரவேண்டும் பிறகுதான் பரதன் வரவேண்டும். வந்ததும் அவன் மணிமுடி சூடவேண்டும் இது மன்னனின் ஆணை. வாய்மை தவறாத மன்னன்.

தசரதன்: (மறுபடியும் வந்து பேசுகிறான்.) உன் மங்கல நாண்தான் அவனுக்குக் காப்பின் நாணாக மாறப்போகிறது. என் மகனைக் காட்டுக்கு அனுப்பு. என்னையும் வீட்டுக்கு அனுப்பப் போகிறாய். இவள் என் மனைவி அல்லள். இன்றே துறந்தேன் இவளை. அப் பரதனும் இனி என் மகன் ஆகான். முனிவா! அவனும் ஆகான் உரிமைக்கு

கைகேயி: உரிமைக்கு!

தசரதன்: நாடாளும் உரிமைக்கு அல்ல! ஈமக்கடன் செய்வதற்கு.

கோசலை: மகனைக் காட்டுக்கு அனுப்புவது வரத்திற்குக் கட்டுப்பட்டு ஒப்புக்கொள்கிறேன். நீர் அதற்குத் தளர்வதுதான் என்னால் ஒப்புக்கொள்ள முடிய வில்லை. மகனைப் பிரிந்த துன்பம் மட்டும் உங்களுக்கு. உங்களை இழக்கும் துன்பம் எனக்கு உண்டாகிறது. நினைத்துப் பாருங்கள், வரத்தின் கொடுமையைக் காட்டிலும் உம் செயலுக்குத்தான் அஞ்சுகிறேன்.

தசரதன்: இராமன் காடு சென்றால் என் உயிர் போய் விடும். இதை யாரும் தடுக்க முடியாது. சாகின்ற காலத்தில் அவன் கையில் தண்ணீர்

பெற முடியாத நிலைமை ஏற்படுகிறதே என்று தான் வருந்துகிறேன். அவன் கையால் நான் ஈமக் கடனும் பெறாத நிலையை அடைகின்றேன்; அது தான் நான் ஏற்கும் கொடுமை.

மகுடம் புனை என்று சொல்லி இன்று சடை புனை என்று சொல்லுகிறேனே. இம் மூப்பிடை என்னை வெறுத்துப் பிரிகின்றான் இனி வாழ்நாள் வேண்டேன்.

எனக்கு முன்னால் அவன் காடு அடையமுடியாது அவன் சேருவதற்குள் நான் போய்ச் சேர்ந்து விடுவேன்.

சீதையின் கைகளைப் பிடித்து மணம் செய்து கொண்டு நாட்டிடைக் கண்ட நான், அதே கைக ளைப் பிடித்துக் காட்டுக்குச் செல்லும் காட்சி யையா காண வேண்டும். அதற்கு நான்தானா கார ணம் ஆக வேண்டும்.

கள்ளக் கைகேயிக்கு நாட்டையும் வாழ்வையும் கொடுத்துப் புகழைக் கைக்கொண்ட வள்ளல் அல் லவா அவன். அந்த வள்ளல் தன்மை என் உயிரை மாய்க்கிறது. மாய்த்துக்கொண்டே யிருக்கிறது. நான் அவனைக் காட்டிற்கு அனுப்பிவிட்டு இக் கைகே யின் முகத்திலா விழிக்கச் சொல்கின்றாய். மகனைப் பிரிந்தேன்; இப் பழியைத் தாங்கி நான் வாழவே ண்டும் என்பதை இராமனே விரும்பமாட்டான். என் மகன் மேல்தான் உயிர் வைத்திருக்கின்றேன். என் உயிர் மேல் எனக்குக் காதல் இல்லையே.

அணியும் மணியும், பூணும் பொன்னும், சிறப்பும் சீரும், திருவும் உருவும் தெரியக்காணக் கொடுத்து வைக்காத நான், முருட்டு ஆடையும் மானின் தோலும் அணிந்த தோற்றத்தையா காண வேண்

டும். இதைக் காண்பது எனக்கு நல்லது என்று நினைக்கின்றாயா?

வசிட்டர்: வேந்தே! அவனை இன்று ஏகாத வண்ணம் தடுக்கின்றேன். முயன்றால் வெற்றி கிடைக்கும்.

தசரதன்: முடியுமா முனிவரே! உம்முடைய ஆற்றலில் நான் நம்பிக்கை வைக்கிறேன். உம்முடைய சொல்தான் என் உயிரைச் சிறிது நிறுத்தி வைக்கும்.

கோசலை: மெய்யின் மெய்யாக விளங்கும் வேந்தே! உலகுக்கெல்லாம் தலைவனாக விளங்கும் மன்னா! உன் உயிரை ஓம்பாமல் இப்படித் துடித்துத் துடித்து விம்மினால் இந்த வையம் முழுவதும் துயரால் சுழலும்! முனிவனோடு நம் ஐயன் வந்தாலும் வரலாம். வீணாக அயர்ச்சி கொள்ள வேண்டாம்.

தசரதன்: வருவானா! மீண்டும் அவனைக் காண்பேனா. மாயக் கைகேயி தன் வரத்தால் என் உயிரை மாய்க்கத் துணிந்து விட்டாள்; கூனி மொழியில் தானும் தன் மாமகனும் தரணியைப் பெறுகின்றார்கள். என் மாமகனைக் காடு ஏகு என்று சதி செய்து விட்டார்களே!

கோசலை: யாரையும் பழிக்க வேண்டாம். பழித்தால்

தசரதன்: பயனில்லை. இராமன் காட்டுக்குப் போவது தவிரான்; என் உயிர் போவதும் தவிர்க்க முடியாது.

வசிட்டர்: ஒரே வழி இருக்கிறது. விரைவில் பரதனுக்குச் செய்தி அனுப்ப வேண்டும். நீர் சொல்வதும் உண்மைதான். இராமனைத் தடுத்து நிறுத்த யாராலும் முடியாது. ஆட்சி

பரதனுக்குத் தான் உரியது. அதைத் திருப் பிக் கொடுக்கப் பரதனுக்குத்தான் உரிமை இருக்கிறது. அவன் நினைத்தால்....

**தசரதன்:** நினைத்தால்

**கைகேயி:** நினைத்தால் முடியாது; பதினான்கு ஆண் டுகள் அவன் காட்டில் வாழ்ந்துதான் தீர வேண்டும். பரதன் முடியை ஏற்க மறுக்க லாம் அது அவன் உரிமை. காட்டுக்குப் போகாமலும் தடுக்கலாம். ஆனால்....

**தசரதன்:** ஆனால், அவன் சொற்களை இராமன் ஏற் பானா என்பதுதான்.

**வசிட்டர்:** எதற்கும் பரதன் வரட்டும்; செய்தி சொல்லி அனுப்புகிறேன்.

## காட்சி : 15

### கூனி, கைகேயி

**கூனி:** என் பெயரும் இப்பொழுது அடிபடுகிறது.

**கைகேயி:** நீயும் மிக உயர்ந்தவள் ஆகிவிட்டாய்.

**கூனி:** நான் உண்மைதான் கூறினேன் இதைச் சூழ்ச்சி என்கிறார்கள்.

**கைகேயி:** அரசியலே சூழ்ச்சிதான். சூழ்ந்து செய்தால் தான் எதையும் செய்ய முடியும். இப்பொ ழுது அவர்கள் அடுத்த திட்டம் போடு கிறார்கள். என் மகனை எனக்குப் பகை யாக்க நினைக்கிறார்கள்.

**கூனி:** மிகவும் சிக்கலான சூழ்நிலை. அவன்

மிகவும் இளையன்; ஒன்றும் தெரியாதவன்; இந்த வசிட்டன் பல நியாயங்களை எடுத்துச் சொல்வான். நாம் போட்ட திட்டமெல்லாம்....

கைகேயி: மண்மூடிப் போகும், பரதன் மீண்டும் ஆட்சியை இராமனுக்குக் கொடுத்து விட்டால்.

கூனி: நாம் ஒன்றும் செய்ய முடியாது. காட்டலாம்; நாம் ஊட்ட முடியுமா? நம் கடமையைச் செய்கின்றோம். அவன் கிடைத்த வாய்ப்பை...

கைகேயி: இழந்து விடுவான் போலிருக்கிறதே...

கூனி: அவ்வளவு விரைவில் பரதன் வந்துவிட முடியுமா? செய்தி போய்ச் சேர்வதற்கே சில நாள் ஆகும். அவன் வந்து சேர்வதற்குள்...

கைகேயி: இராமன் காட்டில் இருப்பான்.

கூனி: மன்னன் இருந்து பேச இருக்க மாட்டான்.

கைகேயி: இந்த அதிர்ச்சியில் என் மகன்.

கூனி: சிறிது கத்துவான். பிறகு தானாக அடங்கி விடுவான்.

கைகேயி: எனக்கென்னமோ அச்சமாகத்தான் இருக்கிறது.

## காட்சி : 16.

**சுமந்தரன், இராமன், இலக்குவன், சீதை.**

சுமந்தரன்: காட்டுக்குச் சென்றுவிட்டீர். வீட்டிற்குச் சென்று நான் என்ன உரைப்பது. தேவியும் இளவலும் தொடரத் தங்களைப் பூவியற்

கானகம் புகஉய்த்தேன் என்று கூறுவதா? இராமனை உடன் திருப்பி அழைத்து வந்தேன் என்று சொல்லுவதா? உங்களை விட்டு நான் எப்படித் திரும்புவேன். மலரினும் மெல்லிய அடியை உடைய உங்களைக் காட்டில் விட்டு நான் மட்டும் திரும்பித் தேரில் போவதா? பழைய நண்பினன் நான்; கல் மனம் படைத்த நான் உம்மை வன்புலத்தில் அனுப்பித் தென் புலக்காலனின் தூதுவனாகச் செய்தி சொல்லத் தசரதன்பால் செல்வதா? நால்திசை .மாந்தரும் நகரமக்களும் தேற்றிக் கொணர்வர் உன் சிறுவன் தன்னை என்று ஆற்றியிருக்கும் அரசனை, வெய்ய என் கூற்றுறழ் சொல்லினால் கொலை செய்வதா!

வேள்வி செய்து அரிதின் பெற்ற உன் சிங்க ஏறு அகன்றனன் காட்டிற்கு என்று செப்புவதா? இந்தச் செய்தியைச் சொல்லி என்னினும் கேகயன் நங்கையே சிறந்தவள் என்ற நிலைமையை உண் டாக்குவதா? அவள் காட்டுக்குப் போக என்று கேட்டாள். அச்சொல் அவன்உயிரைப் போக்க வில்லை. போய் விட்டான் என்ற சொல்லைச் சொல்லி மன்னனின் உயிரைப் போகச் செய்வதா. அவள் சொல் அவனைத் துடிக்க வைத்தது. என் சொல் அவனைச் சாக வைத்தது என்னும் பழி யைத் தாங்குவதா?

**இராமன்:** (அவன் கண்ணீரைத் துடைக்கின்றான்) அறம் பெரிதா? நும் துன்பம் பெரிதா? எண்ணிப்பார். வீரம் என்பது பகைவரைத் தாக்கிப் புண்படுத் துவது அல்ல இறப்பினும் திருவெலாம் இழப்ப எய்தினும் அறம் துறக்காதவரே உண்மையான வீரர். நான் பிறந்ததால் இம்மன்னர்குலம் அறத்தி னின்று வழுவவேண்டுமா?

மகனை அனுப்பிப் புகழ் பெறுதலே மன்னனுக்குத் தவமாகும். அன்னவன் சொல்லேற்றுக் கானம் செல்லலே எனக்குத் தவமாகும்.

கானகம் சென்ற செய்தியை உன்னால் உரைக்க முடியவில்லை என்றால் முனிவனைக் கொண்டு இதனை உணர்த்து பரதனுக்கு நீ அருகிருந்து அறிவு சொல்லி அவனுக்குச் சிறந்த அமைச்சனாக நீ விளங்கு இது உன் கடன்.

பரதனால் என் தந்தை என்னைக் காட்டுக்கு அனுப்பினான் என்று வஞ்சம் பாராட்டாதே. என்னிடம் காட்டும் அதே அன்பை அவனிடமும் காட்டவேண்டும்.

அது மட்டுமல்ல அமைதியாக மன்னனுக்கு எடுத்துச்சொல்லி, என்மீது காட்டும் அன்பைத் தம்பி பரதனிடமும் அவர் காட்டவேண்டும் என்று நான் வேண்டியதாகச் சொல். ஏழிரண்டு ஆண்டு நீத்து மீண்டும் வந்து அவர் திருவடி தாழ்வேன் என்று கூறி அவரது தளர்ச்சியைப் போக்கு நீ. இதை வசிட்டன் வாயால் மெல்லச் சொல்லச் செய். என்னைப் பயந்து எடுத்த மூவர்க்கும் குறைவிலா என் நெடுவணக்கம் கூறி அவ்விறைமகன் தசரதனின் துயர் துடைத்து அவர் அருகில் இரு.

**சீதை:** அரசர்க்கு அத்தையர்க்கு என்னுரையையும் வணக்கத்தையும் முன் இயம்பு. என் பொன்னிறப் பூவைக்கும் கிளிக்கும் நன்மொழிபயிற்றிப் போற்றுக என்று என் தங்கையரிடம் இயம்பு.

**சுமந்திரன்:** பூவைக்கும் கிளிக்கும் நன்மொழி பயிற்றி வந்த நங்கையே! உன் மென்மொழி கேட்கும் வாய்ப்பை இந்த நாடே இழந்து விட்டது. நீ இந்த இனிய சூழலை விட்டுக் காட்டுக்குப் போவதை

எண்ணுந்தோறும்.

**சீதை:** வேதனையாக இருக்கிறது. எண்ணாமல் போ. அது தான் நல்லது.

**சுமந்திரன்:** இலக்குவரே நீரும்.

**இலக்குவன்:** செய்தி கேட்கின்றாய். யாருக்கு நான் செய்தி அனுப்புவது.? மன்னவன் என்ற மதிப்பை இழந்த அவருக்கா செய்தி. துரோகம், உனக்குத் தான் ஆட்சி என்று உறுதி கூறி நறிய கூந்தலாளிடம் அப்படியே சரண் அடைந்து பேச்சை மாற்றிய மன்னனை வாய்மை மன்னன் என்று நீ மதிக்க லாம்; என்னால் மதிக்க முடியாது. அவரை மதித்து ஒரு செய்தி என்னால் சொல்லி அனுப்ப முடியாது. கானகம் செல்ல மகனை அனுப்பி வைத்துவிட்டு நன்றாக உண்டு உறங்கித் துய்த்து அவரை நாட்டில் இருக்கச்செய். இன்னும் பிரிந்து வானகம் புகாத வலிமையை நான் பாராட்டிய தாகக் கூறு. நான் யாருடனும் பிறக்கவில்லை என்ற செய்தியைப் பரதனிடம் சொல்லிவிடு. மன்னன் இராமனோடு நான் பிறக்கவில்லை. வெறும் இராமன்தான் என் அண்ணன். மண்கொண்டு ஆள் கின்ற பரதனோடு நான் பிறக்கவில்லை. அவனோடு பிறந்தேன் என்று சொல்லிக் கொள்ளவும் வெட் கப்படுகிறேன். சத்துருக்கனனும் என்னோடு பிறக்கவில்லை. நான் தனியன். உலகத்தில் ஒருவ ரோடும் ஒட்டி வாழமுடியவில்லை. யாரும் எனக்கு உறவினர் அல்ல என்று கூறு பொறுப் பைத் தட்டிக்கழிக்கும் என் அண்ணன் இராமனை அண்ணன் என்று கூறிக் கொள்ள வெட்கப்படு கிறேன். பொறுப்பை ஏற்று உறவை மறந்து நாடாள வரும் அவனை என் அண்ணன் என்று சொல்ல வெறுப்புதான் உண்டாகிறது. என்னுடன்

யாரும் பிறக்கவில்லை. என் வலிமை மட்டும் உளது என்று அவனிடம் நினைவு படுத்து. தப்பித் தவறி அவன் எங்களை எதிர்த்தால்...

**இராமன்:** தம்பீ! சீர்மையற்ற சொற்களைச் சிதறுகின்றாய். நா.

**இலக்குவன்:** அடக்கம், அடங்கிவிட்டேன்.

**சுமந்திரன்:** துன்பச்சுமையைச் சுமந்து நிற்கின்றேன்.

**இலக்குவன்:** நீ நில். நாங்கள் போகிறோம்.

**சுமந்திரன்:** வருகிறோம் என்று சொல்

**இராமன் :** போய் வருகிறோம் பதினான்கு ஆண்டுகள் கழித்து.

**சுமந்திரன்:** கழித்துக் கூட்டி பதினான்கு ஆண்டுகள். பத்தும் நாலும்.

**இராமன்:** பத்தும் நாலும் பதினாலு; ஏழும் ஏழும் பதினாலு; நாலும் பத்தும் பதினாலு எப்படியும்.

**சுமந்திரன்:** பதினான்கு ஆண்டுகள். பதினான்கு.... வருகிறேன். மன்னனைக் காண உடனே விரைவில் செல்கிறேன். காடுசென்றார் என்ற செய்தியைச் சொல்லத்தான் பிறந்தேன். அந்தக் கொடுமையைச் செய்யத்தான் பிறந்தேன்.

(இராமன், இலக்குவன், சீதை நீங்கல்)

**சுமந்திரன்:** இதைச் சொல்லத்தான் பிறந்தேன். மன்னன் உயிரைப் பிரிக்கத்தான் திரும்புகிறேன். சுமந்திரன் இனிக் கால தூதன் ஆகிறான்.

## காட்சி 17

### கைகேயி, கூனி

**கூனி:** அம்மா, என்னால் வெளியே தலைகாட்ட முடிய வில்லை. இந்தக் கூன் இதற்காகவே அமைக்கப் பட்டது போல் இருக்கிறது; தலையை நிமிர்த்துப் பார்க்கவே முடியவில்லை.

**கைகேயி:** என்ன நகைச்சுவையா! அவலத்திலும் நகைச்சுவை காண்கிறாயே.

**கூனி:** யாராவது சிரிக்கிறார்ளா என்று பார்க்கி றேன். சிரிப்பதையே இந்த ஊரில் மறந்து விட்டார்களே. இவ்வளவு தூரம் இந்த ஊர் பாழாய்ப் போகும் என்று எதிர் பார்க்க வில்லை. ஒவ்வொருவரும் தசரதனைப் போலவே காட்சி அளிக்கின்றனர்.

**கைகேயி:** சாவு விழுந்ததைப் போல் இருக்கிறது. இந்த நாடு. அவர்கள் விம்மி விம்மி அழும் ஓசை.

**கூனி:** காது கொடுத்துக் கேட்க முடியவில்லை. இரண்டு சொற்கள் விடாமல் ஒலிக்கின்றன. 'கேகயன் மகள்' 'கூனி' இந்த இரண்டு சொற் கள் அவர்கள் பழிப்புரையில் மாறி மாறி ஒலிக்கின்றன.

அணிகலமும் மங்கலமும் தம் கூந்தல் இழக்க மாதர்கள் புடைபெயரக் கண் சிவந்து அடி சிவந்து பதைத்துப் பரித வித்துத் தெருவில் வந்து நின்று விட் டார்கள். கொடி சாய்ந்து துவண்டது போல விழுந்து அழுகின்றார்கள்.

அரசன் அருளிலன்; அறத்தைத் கைவிட்டுப் புரட்சி செய்வோம் என்று கதறுகின்றனர்.

கைகேயி: அழட்டும்! மன்னன் அழுகைக்கே செவி சாய்க்காத நாம் இந்த மாநிலம் அழு கிறது என்பதற்காக.

கூனி: அதுதான் சொல்ல வந்தேன். அவலத்தின் மடியில் நாம் தவழ்ந்து விளையாடுகின்றோம் என்று சொல்லத்தான் வந்தேன்.

கைகேயி: வசிட்டரும் தான் சொல்கிறார்.

**'கிள்ளையொடு பூவை அழுத; கிளர்மாடத்து**
**உள்ளுறையும் பூனை அழுத; உருவறியாப்**
**பிள்ளை அழுத; பெரியோரை என் சொல்ல!**
**வள்ளல் வனம் புகுவான் என்றுரைத்த மாற்றத்**
**தால்'** என்று ஒரு கவிதையே பாடிவிட்டாரே.

கூனி: **ஆவும் அழுத; அதன் கன்று அழுத; அன்றலர்ந்த பூவும் அழுத; புனல்புள் அழுத; கள்ளொழு கும் காவும் அழுத; களிறு அழுதன; கால் வயப்போர் மாவும் அழுதன; அம்மன்னனை மானவே.**

என்று நானும்தான் ஒரு கவிதை சொல்ல முடியும். கவிதை எழுதுவோர்க்கு இதுதான் நல்ல வாய்ப்பு. அழுது அழுது ஓய்ந்து விடுவார்; யாரும் இவர்களைத் தடுக்க முடியாது. காட்டை இராம னுக்குக் கொடு என்றுரைத்த கைகேயியும் கொடிய கூனியும் தவிரக் கொடியவர் பிறர் இல்லை என்று பேசுவதுதான் என்னால் தாங்க முடியவில்லை.

கைகேயி: இதையெல்லாம் கண்டு கேகயன் மகள் கலங்காள். அறியட்டுமே இந்த மாநிலம்; என் காதிலும்தான் பல சொற்கள் படுகின்றன.

'மண் செய்த பாவம் உளது'

"மாமலர் மேல் இருக்கும் திருமகள் செய்த பாவம் அதனிற் பெரிது"

"அனைவரையும் புண்படுத்திய நிலை எல்லாம் விதி"

"இதைக் காணும் கண்கள் செய்த பாவம் கடலிற் பெரிது"

**கூனி:** இது பொது; பரதன் அரசாள மாட்டான் என்று தப்புக்கணக்குப் போடுகிறார்கள். அதுதான் வியப்பாக இருக்கிறது.

**கைகேயி:** தசரதனும் தப்புக் கணக்குப் போட்டான். அவள் கைப்பொம்மை; ஆடுவாள்; பாடுவாள்; என்று கேகயன் மகளைப்பற்றி நினைத்தான். என் மகன் நிச்சயமாக என் பேச்சைக் கேட்பான்.

**கூனி:** ஏன், மன்னன் வாய்மொழியும் அதுதானே. பரதன் ஆள வேண்டும் என்பதுதானே. பொம்மை என்று நினைத்தான் மன்னவன். இப்பொழுது மக்கள் உங்களைப் பற்றிப் பேசுவது, அம்மம்ம, காது கொடுத்துக் கேட்கவே முடியவில்லை. கள்ளூறு செவ்வாய்க்கணிகைகாண் கைகேயி; அவள் மயக்கி மன்னனை ஏமாற்றி விட்டாள் என்று பேசிக் கொள்ளுகிறார்கள்.

**கைகேயி:** தசரதன் மனைவியை இப்படி வாய் கூசாமல் பேசுகிறார்கள். பேசட்டுமே. மக்கள் நினைப்பது பெரிதல்ல. மன்னனே இப்படித்தான் நினைத்து இருக்கவேண்டும். சுகத்துக்கு இவள், உரிமைக்கு அவள், என்றுதான் திட்டமிட்டு இருக்கவேண்டும் இல்லாவிட்டால் பட்டம் அவனுக்கு; நாடு கடத்தி இருக்கச் செய்த திட்டம் என் மகனுக்கு.

**கூனி:** வேண்டும் இந்த மன்னனுக்கு, அவன் மயங்கி வரம் கொடுத்தானே. வேண்டும் இவனுக்கு என்று சாமா

தானமும் பேசுகின்றனர். எது வாய்மை என்ற கேள்வியில் இறங்கிவிட்டனர்.

இராமனுக்கு முன்னே கொடுத்து முறைமாற்றித் தம்பிக்குப் பின்னே கொடுத்தால் மெய் பிழையாதோ என்று கேட்கின்றனர்.

**கைகேயி:** எது நிற்கிறது? இருந்து பார்த்தால்போகிறது, நம்மை யாரும் கலக்க முடியாது. கணிகை என்று என்னைக் கணக்கிட்டது பெரிதல்ல. மண்மகள் திருமகள் எல்லோரையும் வஞ்சம் தீர்க்கின்றனர், பொது மக்கள். இராமனை அடைந்த மண்மகள் இப்பொழுது எப்படி மற்றொருவரை அடைவாள். இராமன் பின் சீதை செல்கிறாள். அவளோடு திருமகள் போக முடியாதா? அந்தத் திருமகள் எப்படித்தான் பரதனை அடைகிறாள் பார்க்கலாம். என்று மண்ணையும் செல்வத்தையும் பொதுமகளாகப் பேசத் தொடங்கிவிட்டனர். இந்தப் பொதுமக்கள் கன்னா பின்னா வென்று பேசுகிறார்களாமே. அவன் மறைந்தால் தான் என் மகனுக்கு இந்த நாட்டில் பெருமை கிடைக்கும்.

**கூனி:** உன் மகனுக்குப் பெருமை கிடைத்தால்தான் உங்களுக்குக் கிடைக்கும்.

**கைகேயி:** அப்பொழுதுதான்

**கூனி:** எனக்குப் பெருமை கிடைக்கும். நீ

**கைகேயி:** நிமிர்ந்து வாழலாம்.

**கூனி:** கூனியும் நிமிர்ந்து வாழலாம். நம் மகன் பரதன் வரட்டும் எல்லாம்.

**கைகேயி:** சரியாகப் போகும். அவனுக்குத்தானே நான் இவ்வளவும்.

**கூனி:** அவ்வளவும் அவனுக்குத்தான்.

## காட்சி 18

### தசரதன், சுமந்திரன்

**தசரதன்:** (தனிமொழி) யார் அது! சுமந்திரன் தேர் ஒலி போல் கேட்கிறது. என் மகன் நிச்சயமாக வருவான். சுமந்திரன் அழைத்து வந்திருப்பான். வாய்மை தவறாத மன்னன் நான். என் மகன்...

**சுமந்திரன்:** வாய்மை தவறமாட்டான்; தந்தை சொல்லை மீறி

**தசரதன்:** நடக்க மாட்டான் என் மகன்.

**சுமந்திரன்:** தாங்கள் வரச் சொன்னால்

**தசரதன்:** வரச்சொன்னால் (நா குழறுகிறது) வர.... எப்படிச் சொல்ல முடியும். வாய்மை தவற

**சுமந்திரன்:** முடியாது அவனை அழைத்து வர

**தசரதன்:** முடியவில்லை. என் மகனைத்தான் இக் கண்கள் காணத் துடிக்கின்றன. இனித் திறக்கவே திறக்காது.

(கண் மூடிக் கொள்கிறான்) அவன் வீரன். வரமாட்டான். கடமை வீரன். பாசத்தால் கட்டுப்படமாட்டான். வசிட்டர்.

**சுவந்திரன்:** அவரும் வாய் மூடிக்கொண்டார். அவரால் எதுவும் பேச முடியவில்லை.

**தசரதன்:** வசிட்டர் வாயால்

**சுமந்திரன்:** இதைச் சொல்ல முடியாது. அவர் அங்கே தனியே கவலையில்

**தசரதன்:** ஆழ்ந்துவிட்டார். கடைசி முறையாகக் கேட்கிறேன். என் மகன் எங்கே? சேய்மையில்

நீங்கினானா? அண்மையில் இருக்கின்றானா? அதுவாவது சொல் பிறகு...

சுவந்திரன்: தானும் தம்பியும் மிதிலை மன்னன் மகளும் கானம்.

தசரதன: போயினான்... போயினான்...போயினார் (ஆவி நீங்கியது)

சுமந்திரன்: மன்னனும் போய் விட்டான்.

## காட்சி: 19

### கோசலை, வசிட்டர்

கோசலை: என் கணவனைக் கொன்றது,

வசிட்டர் : கேகயன் மகள்.

கோசலை: இல்லை என் மகன்தான். மகன்தான் தந்தையைக் கொன்றான். அவன் பிறந்ததால் தான் இவர் இறந்தார். வாழை மரம் கன் றீன்று சாகிறது. மூங்கிலும் அப்படித்தான். சிப்பியும் நண்டும் முத்தும் குஞ்சு ஈன்று தாம் சாகின்றன. மகனால் மறைந்தான் மன்னவன்.

வசிட்டர்: மகனையும் வாழவைக்காமல் தானே மறைந்தார்.

கோசலை: கேகயன் மகள் வெற்றியடைந்தாள். கொண்டாள் வரம். பெற்றாள் வையம். ஒழித்தாள் கணவனை. அழித்தாள் எங்கள் வாழ்வை. இனி அவள் மகனும் அவளும் வாழ்வார்கள். வாழட்டும். அவள் மகன்

பரதன் வந்த பிறகுதான் அவருக்கு ஈமக் கடன் செய்ய முடியும். அவர்...

## காட்சி: 20

### கூனி, கைகேயி

**கைகேயி:** கதை உச்ச நிலையை அடைந்துவிட்டது. மன்னன் மாண்டான்.

**கூனி:** இனித்தான் நம்

**கைகேயி:** வீழ்ச்சி; ஏணியில் ஏறி உயர்நிலை அடைந்தோம். ஏணி சாய்ந்துவிட்டது. அதனால் நாம் இறங்கத் தேவையில்லை. ஏணி தானே சாய்ந்தது. சாயட்டும். அதற் காக வருந்திக் கொண்டிருக்க முடியாது.

**கூனி:** உயரத்திலேயே வாழ முடியுமா? மண்ணுக்கு வந்துதானே ஆகவேண்டும்

**கைகேயி:** விதவைக் கோலம் தாங்கினேன். தூய்மை யான கோலம். வாய்மைக்காக மன்னன் மாண்டான். இப்பொழுதுதான் பெருமைப் படுகிறேன்.

என் கணவன் மாவீரன் என்பதை உணர்கி றேன். கொள்கையின் உறைவிடம், குன்றாத குணக்குன்று என்பதை அறிகிறேன். அவ ரோடு வாழ்ந்த வாழ்வு தூய்மை நிறைந்த வாழ்வு. ஓர் அற்பனோடுவாழ்ந்து ஏமாந்தேன் என்று எண்ணத் தேவை இல்லை. உலகம் அவர் புகழ் பேசுகிறது: அதில் என்னை நான் மயங்கி நிற்கிறேன்.

**கூனி:** உலகம் உங்களை இகழ்ந்து நிற்கிறதே.

**கைகேயி:** *மன்னன் மாண்டான். ஆனால், வாய்மை மாளவில்லை. அந்த வாய்மை அவர்களுக்கு நன்மை தர வில்லை. ஆனால் வாய்மையின் பெருமையை அவர்களால் உணர முடிய வில்லை. உண்மை கசப்பாகத் தான் இருக்கும். அந்த வாய்மை.*

**கூனி:** *உங்களுக்கு வெற்றி தரும் என்று நினைக்கிறீர்கள். அது பரதனைப் பொறுத்து இருக்கிறது. அவன் வரட்டும். அதைப் பொறுத்துதான் இருக்கிறது நம் வாழ்வு.*

**கைகேயி:** *உயரத்தினின்று இறங்கி மண் மீது வா! அப் பொழுதுதான் உரிமை கிடைக்கும். நேரே அவனை இங்கு அழைத்துவர ஏற்பாடு செய்.*

**காட்சி : 21**

**பரதன், கூனி**

**கூனி:** *மன்னவன் தங்களைப் பார்க்க மாட்டார்.*

**பரதன்:** *ஏன்?*

**கூனி:** *முதலில் உங்கள் தாய் உங்களை அழைக்கிறாள்.*

**பரதன்:** *தாய்... யார் கோசலை.*

**கூனி:** *பெற்றவள்*

**பரதன்:** *இதோ வந்துவிட்டேன்.*

**காட்சி: 22**

**பரதன், கைகேயி**

**பரதன்:** *இதோ வந்துவிட்டேன். அம்மா!*

**கைகேயி:** *மகனே (பாசத்தோடு தழுவ விழைகின்றாள்.)*

எம் தந்தை நலமா? எம் சகோதரர் நலமா? மாமன் வீட்டில்

**பரதன்:** என் தந்தை நலமா? என் சகோதரர் நலமா? இந்த வீட்டில்.

**கைகேயி:** வானம் எய்தினான் வானவர் தொழ. நீ வருந்தாதே.

**பரதன்:** என்ன அமைதியான பதில்! தந்தை விண்ணை எய்தினார் என்று தேன்போல் மொழி கின்றாயே.

**கைகேயி:** ஏன் என்று கேட்காதே. நல்லதுதான் நடந்தது.

**பரதன்:** தீயைச் செவியில் வைத்துத் தேன் என்று சொன்னால்,

**கைகேயி:** ஏன் என்று கேட்காதே. எல்லாம் உன் நன்மைக் குத்தான்.

**பரதன்:** என் நன்மைக்காக எவ்வளவு நன்மைகள் அழிந் தன என்று கணக்கிட்டாயா? அறத்தை வேர் அறுத்தாய். அருளைக் கொன்று உன் அருள் நெறியை மருளச் செய்தாய். நீதியை மறைத்தாய். இதை விட மாசு வேறு உண்டோ? நீ கேகயன் மகள் என்று காட்டிக் கொண்டாய். நான் தசர தன் மகன் என்பதை மறந்துவிட்டாய்! நீ உன் தந் தையின் நலத்தைக் கேட்டாயே. நான் என் தந் தையின் நலத்தை விரும்ப மாட்டேனா? எனக்குத் தாய் தந்தை தலைவன் எல்லாம் இராமனே. அவனைக் கண்டு தான் பிறகு. என் அண்ணனை யும் எங்காவது,

**கைகேயி:** அனுப்பி வைக்கவில்லை. அவன் கானகம் போன தால்தான் அவர்

வானகம் போனார்.

பரதன்: என்ன?

கைகேயி: அவன் மட்டும் அல்ல. சீதையும் அவன் தம்பியும் உடன் சென்றார்கள். நீதான் ஈமக்கடன் செய்ய வேண்டும். தந்தையின் ஈமக்கடன் உனக் காகத்தான் காத்துக் கொண்டிருக்கிறது. அதுவும் நீ செய்யக் கூடாது. உன் தம்பி சத்துருக்கனனுக் குத்தான் அந்த உரிமை கொடுத்திருக்கிறது.

பரதன்: எல்லாம் திடுக்கிடும் செய்திகளாக நிற்கின்றன. ஒன் றுமட்டும் கேட்கிறேன். தந்தை இறந்த துயரால் இராமன் காடு ஏகினானா?

கைகேயி: இல்லை. இராமன் காடு ஏகிய துயரால் தந்தை இறந்தார்.

பரதன்: பெற்றவன் இருக்க மகன் காடு உற்றமை ஏன்? மிகப் புதுமையாக இருக்கிறதே?

கைகேயி: வாக்கினில் வரம் பெற்று மைந்தனை வனத்திடைப் போக்கினேன். பார் உனக்கு ஆக்கினேன். மன்னன் அது பொறுக்க முடியாமல் தன் உயிர் நீங்கினான். இதுதான் நடந்த செய்தி.

பரதன்: என் கைகள் துடிக்கின்றன உன் கழுத்தை முரிக்க. ஆனால் என்அண்ணன் என் கைகளைப் பிடித்து நிறுத்துவது போன்ற உணர்வு தோன்றுகிறது. நீ கொலை செய்யத் துணிந்தாய். கேகயன் மகள் கொலை செய்வாள். தசரதன் மகன் அதைச் செய் யான். தாய் என்பதற்காக உன்னை விட்டு வைக்க வில்லை. இராமன் தம்பி என்பதால்தான் உன்னை விட்டு வைக்கிறேன்.

கைகேயி: பேசு என்னை ஏசு. இது பழக்கமாகி விட்டது. கேகயன்மகள் உறுதி கொண்ட நெஞ்சத்தாள்; இதை மறக்காதே. அவள் மகனும் அறம் திறம்ப

மாட்டான். அறத்தை அறிவதற்குத்தான் சிறிது, காலம் தாழ்க்கிறது. குரல் எழுப்புகிறார்கள். கூக் குரல் இடுகிறார்கள். துடிக்கின்றார்கள். பிறகு அறம் வெல்கிறது. தானாக அடங்கிவிடுகிறார்கள். வாய்மைதான் வெல்லும். அதை வெல்லவைத்து மன்னவன் மெய்யுடலை நீத்து மெய்ப்புகழைப் பெற்றான். கடமை வீரன் இராமன் தந்தையின் சொல்லைத் தட்டாமல் நடந்து கொண்டான். கேகயன் மகளும் இந்த வாய்மைக்காகத்தான் வித வைக் கோலத்தையும் தாங்கி நிற்கின்றாள். மன்னன் மடிவான் என்று தெரியும். வாய்மை மடியக்கூடாதே என்பதற்காகச் சொன்ன சொல்லை அவள் திருப்பிப் பெறவில்லை. ஓர் ஆசை அவளுக்கு இருக்கிறது. கேகயன் மகள் இந்த மணி மகுடத்தைத் தன் மகன் சூட்டிக் காண விரும்பு கிறாள். அதற்குப் பிறகு,

**பரதன்:** அவள் நினைத்த இலட்சியமெல்லாம் நிறைவேற்றி விட்ட பெருமை அடைவாள். அறம் அவளுக்கு அடி பணியாது. வாய்மை, அறம் என்ற சொல்லை விலைக்கு வாங்கிவிட்டாய். மந்திரத்தால் கட்டுண்டு மதி மயங்கினார் என் முதல்வர்கள். இப்படி ஓர் அறம் நிலைக்கும் என்று கருதுகின்றாயா? மாள வும் உளன் ஒரு மன்னன்; உன் சொல்லால் கான் ஆளவும் உளன் ஒரு வீரன். இதையெல்லாம் கண்டு வைத்து இந்தப் பார் ஆளவும் உளன் ஒரு பர தன் என்றால், இதுதான் அறம் என்றால், அந்த அறத்தையே அடியோடு ஒழிக்க வேண்டும். பர தன் வெறும் சொல்லுக்குப் பணியான். உண் மைக்குப் பணிவான். வன்புக்கு இணங்கான். அன் புக்கு இழைவான். சூழ்ச்சியால் பழியுடை ஆட் சியை அன்னை ஒருத்தி தருகின்றாள் என்றால் அது ஏற்க இவன் வரமாட்டான். பரதன் முறை

கெட்டு நெறி மாறான். நஞ்சைக் கக்கும் நாகம் என இருக்கின்றாய். நீ கற்பு என்னும் வரம்பை அழித்தாய். உன்னை அகத்தில் வைத்துப் போற்றிய மன்னனை வேர் அறுத்தாய். இவ்வரம் கொண்ட நீ இன்னும் எதைத்தான் செய்யமாட்டாய். கணவன் உயிர் போகும் என்று தெரிந்தும் விடாப்பிடியாக நின்றாய் என்றால், உன்னைப் பெண் என்று சொல்லுவதா?

**கைகேயி:** பேய் என்று சொல்.

**பரதன்:** தாய் என்று சொல்லிக்கொள்ள வெட்கப்படுகிறேன்; பேய் என்று சொல்லவும் பின் வாங்குகிறேன், உன்னால் பேய் பெருமை அடையும் என்பதனால். பால் ஊட்டி வளர்த்த நீ பழியூட்டி அழிக்க முற்பட்டாய் ஒன்றும் செய்யாத மன்னனை வாயால் கொன்று நீ பழி பெற்றாய். இராமன் காட்டுக்குப் போனது கூட உன் நெஞ்சைக் கலக்கவில்லையா? நீ......

**கைகேயி:** கல்; அசையாத கல். உரங்கொண்ட நெஞ்சள் உன் தாய். இலட்சியப் பாதையில் நிற்பவள் உன் தாய். நீ பழி பாவம் என்ற சொல்லால் உண்மையை மறக்கின்றாய். மறைக்க முயல்கின்றாய். யார் செய்தது குற்றம்? நானா அவரைக் கொன்றேன்?

**பரதன்:** உன் வாய்.

**கைகேயி:** அல்ல. அவர் வாய்மை. அதற்காக மகிழ்ச்சி அடை. கணவன், உலகம் எல்லாம் எதிர்த்த போதும் அஞ்சாது நின்றாள். இவள் கேகயன் மகள். நீ மட்டும் மருட்டினால் நான் கலங்குவேன் என்று எண்ணுகின்றாயா? அதுதான் நடக்காது. தன் மகன் நன்றாக வாழ வேண்

டும் என்று நினைப்பது ஒவ்வொரு தாயின் உள்ளக்கிடக்கை. இவள் நீ நினைப்பது போலப் பேய் அல்லள், பெண். ஒவ்வொரு பெண்ணும் தான் தாய்மை அடைந்தால்தான் அவள் உண்மையில் பெண் ஆகின்றாள். மகன் வாழ வேண்டும் என்பது பெண்ணின் குரல். அதைக் கேட்டு இந்த உலகமே நடுங்குகிறதே. அதற்கு நான் என்ன செய்ய முடியும்? நீ அவர்கள் படித்த பள்ளியில் தானே படித்து இருக்கின்றாய் பழைய நீதிகள் தாம் உன் உள்ளத்தில் பதிந்து இருக்கும். தந்தை மறைந்தான். அது ஏன் என்று கேட்க உனக்கு என்ன உரிமை இருக்கிறது? என்னை விட நீ என்ன அவருக்கு நெருங்கிய உறவோ? நானே அவர் கொலைக்குக் காரணம் என்றாலும் கலங்காமல் நிற்கின்றேன். எல்லாம் அறம் காக்கவே. அவன் கானகம் ஏகினான் என்றால் அவன் என்னை எதிர்க்க முடியாமல் என்று நினைத்தாயா? நான் செய்வது தவறு என்றால், அது கடமை என்று ஏற்றது ஏன்? தந்தை இறக்கின்றார் என்று தெரியும். தெரிந்தும் அவன் ஏன் காடு ஏகவேண்டும். தந்தையைவிடக் காடு பெரிதா? வாய்மை பெரிது என்பதால். அதுவே மன்னனின் கட்டளை; ஏற்க வேண்டும் என்பதால்; அதைத் தட்டி நடக்க உனக்கு உரிமை கிடையாது.

பரதன்: அவர்கள் செய்தது தவறு என்று நான் சொல்லவில்லை. அறத்திற்காக மன்னன் உயிர் துறந்தான். அதே அறத்தின் அடிப்படையில்தான் அண்ணனும் அரசுச் செல்வம் துறந்தான். தாயின் சூழ்ச்சியால் ஞாலம் அவனோடு பிறந்தவன் ஆண்டான் என்னும் இழிசொல்லை நான் மட்டும் ஏன் ஏற்க வேண்டும்? அறத்தால் அவர்கள் புகழ் அடைந்தார்கள். அதே அறத்தைக் காட்டி என்னை

மட்டும் இகழ்ச்சி அடையும்படி செய்யலாமா? தந்தை இறந்துபடுவான் என்று தெரிந்ததும் அவன் திரும்பவில்லை என்றால் அதற்குக் காரணம் என்ன? நிச்சயமாக நான் அரசாள்வேன் என்று கருதித்தானே அவன் திரும்ப வில்லை. எனவே, அவனும் நான் ஆட்சி செய்யப்போகின்றேன் என்று உறுதியாக நம்பியிருக்கின்றான். இந்தப் பழிச்சொல்லுக்கு நான் ஆளாக வேண்டுமா?

**கைகேயி:** சொல்; அது பழியா புகழா அதைப்பற்றிக் கவலைப்பட்டால் நடக்காது. கடமை உனக்குக் காத்து நிற்கிறது. வரம் உன்னை உயர்த்தி நிற்கிறது. இதை மறுக்க,

**பரதன்:** எனக்கு உரிமை இல்லை எனலாம். நீ செய்த தவற்றுக்கு நான் உடந்தை என்று உலகத்துக்குக் காட்டச் சொல்லுகிறாய். அவன்கீழ் அடி பணிந்து அடிமையாகக் கிடக்க வேண்டிய தம்பி, அவனைத் துரத்திவிட்டு ஆட்சிப் பீடத்தில் அமர்வதா? நினைக்கவே முடியாத செயல். நான் இன்னமும் உயிரோடு வாழ்வது பொருந்தாது. என் உடன் பிறந்தவன் கையே இலையாகப் புல்லடகு உண் கின்றான். நான் கலமேந்திச் சோறும் நெய்யும் உண்டு மகிழ்வதா? இந்த உலகம் என்ன நினைக் கும்? வில்லார் தோளான் மேவினன் வெங்கானகம்; இதைக் கேட்டுத் தந்தை துஞ்சினார். இவற்றை யெல்லாம் கண்டு நஞ்சே அனைய உன்னைக் கொல்லாமல் நிற்கின்றேன். உன் பழியாலே குறை வுற்றேன். மேலுக்குப் பிறர் மெச்சிக்கொள்ள அன் புடையவன்போல் அழுகின்றேன். நீ செய்த செயலைப் பாரோர் கொள்ளார். நானோ உயிரைப் பேணிப் பழியைத் தாங்கேன். எதனாலும் இந்தப் பழி தீராது. திருமகளும் நில்லாள். இவ்வளவு அறி வுக்குரிய சிந்தனை உனக்கு எப்படித் தான் பிறந்

ததோ? அறமெல்லாம் வேரோடும் கேடாக முடித்து என்ன விளைவித்தாய்?

**கைகேயி:** இதுதான் வேறுபாடு. நீ பார்க்கின்ற பார்வை வேறு; நான் பார்க்கின்ற பார்வை வேறு. இதில் என்னைப்பற்றி நான் எப்போதுமே சிந்திக்கவில்லை. இனியும் சிந்திக்கப் போவதில்லை. நான் விதவை ஆவேன் என்பதும் எனக்குத் தெரியும். இராமன் காட்டுக்குப் போனால் இந்த நாடே அழுகையில் ஆழும் என்பதும் எனக்குத் தெரியும். இதற்கெல் லாம் அஞ்சாத நான், நீ என்னைக் கொல்லப் போகிறாய் என்பதைத்தான் கேட்க நிற்கின்றேன். கொல்லப்போவதற்கு நான் அஞ்சவில்லை. உன் தாய் கேகயன் மகள் உறுதிகொண்ட நெஞ்சினள் என்பதனை நீ நினைவில் கொள்.

**பரதன்:** உலகத்தின் பழிக்கு நீ அஞ்சவில்லை. நான் அஞ்சு கின்றேன். உன்னைக் கொன்றால் தாயைக் கொன்ற பழி என்னைச் சாரும். நாட்டை ஆள ஒருப்பட் டால் மீளாப் பழிக்கு ஆளாவேன்.

அமுது என்று நஞ்சைப் படைத்து வைத் திருக்கின்றாய். அந்த நஞ்சை உண்டால்தானே அது என்னைக் கொல்லும். நீ அமைத்த ஏற்பாட்டிற்கு இசைந்தால்தானே பழி என்னைச் சாரும்.

**கைகேயி:** உன் கோழைமை கண்டு நான் இரங்குகின்றேன். உலகம், பழி என்ற இரண்டு சொற்களுக்கு அஞ்சு கிறாய். எந்த உலகத்துக்கு நான் அஞ்சவில்லையோ, எந்தப் பழிக்கு நான் வணங்கவில்லையோ, அந்த உலகத்துக்கும், பழிக்கும் நீ அஞ்சுகிறாய். இதற்குப் பாசம், பரிவு, அறம் என்ற உயர்ந்த சொற்களுக் குப் பொருள் கொடுக்க நினைக்கின்றாய். கொண்ட கணவனை இழந்தேன்; வளர்த்த மகனைத் துறந்தேன். பெற்ற மகன் எனக்குப் பகையாவான்

என்று எதிர்பார்க்க வில்லை. இங்கேதான் என் சிந்தனை தோற்றுவிட்டது.

**பரதன்:** நீ கேகயன் மகள் என்பதை உணர்கிறேன். நான் தசரதனின் மகன் என்பதை உணரவில்லை நீ. இங்கேதான் தவறு செய்துவிட்டாய். உன் வயிற்றில் பிறந்தேன் என்று உரிமை கொண்டாடுகின்றாய். அதற்காகத்தான் நான் சிறுமை அடைகிறேன். பிறந்த மண்ணால் ஒரு செடிக்குப் பெருமையில்லை. அதன் விதையால்தான் அதற்குப் பெருமை உண்டாகிறது. பரதன் யார்? அவன் உன் மகன் நான் குழந்தையாக இருக்கும் பொழுது; தசரதனின் மகன் அன்றும் இன்றும்; இராமனின் தம்பி அது என்றும் இதை மறந்துவிட்டாய்.

**கைகேயி:** தசரதனின் மகன் நீ; இராமனின் தம்பி நீ;அதை மறக்கவில்லை. அதைத்தான் இன்று உண்மை என்று காட்ட வேண்டுகிறேன். கேகயன் மகன் குழந்தை அல்ல நீ ஏமாந்து போவதற்கு. தசரதன் மறைந்தான்; இராமன் துறந்தான். இப்பொழுது யார் இந்த ஆட்சியை மேற்கொள்வது? தசரதனின் மகன்; இராமனின் தம்பி என்பது உண்மையானால் ஆட்சிக்கு உரிமை ஏற்று நாட்டின் நலத்தை நீ கவனிக்க வேண்டும் நான் என்ன செய்தேன்.

**பரதன்:** குழப்பம் மிகுகிறது. கல்லையும் உடைக்கலாம். இரும்பையும் வளைக்கலாம். நெருப்பையும் அணைக்கலாம். வெள்ளநீரையும் நிறுத்தலாம். உன் நெஞ்சின் ஆழத்தைக் கண்டு உன்னை மாற்ற...

**கைகேயி:** நீ சிறுவன். பழைய ஏடுகளைப் படித்து அதுதான் பண்பு, நெறி, தருமம். கடமை என்றெல்லாம் எண்ணி வளர்ந்தவன் நீ. கேகயன் மகள் புதிய சிந்தனை கொண்டவள். அடிமையற்ற உணர்வும்,

அஞ்சா உரனும் தெளிந்த அறிவும் கொண்டவள். உள்ளம் அலைகடலுக்கு அசையாத பாயமரம். கொந்தளிப்புக்குச் சிதையாத கோபுரம். காற்றுக்குச் சாயாத பெருமரம். அவள் உள்ளத்தை நீ ஒருவனாவது உணர்வாய் என்று எண்ணினேன்.

**பரதன்:** இரண்டே வழிதான் உள்ளது.ஒன்று உன் ஏவலுக்கு அடிபணிந்து உலகத்தின் பழிக்கு ஆளாவது. அல்லது, உன்னைக் கொன்று மீண்டும் பழி மிகுந்தவனாக ஆவது.

**கைகேயி:** அதிலாவது உனக்கு வீரம் இருந்தால் நான் மிகப் பெருமை அடைவேன். இராமன் பழிக்கு அஞ்சினான்; தசரதன் அதே பழிக்கு அஞ்சி உயிர் விட்டான்; என் மகன் பழிக்கு அஞ்சாமல் ஒருபடி உயர்ந்துவிட்டான். தாயைக் கொன்ற மாவீரன் என்று பெருமை அடைவான்.

**பரதன்:** உன்னைக் கொல்வதால் நீ உயர்ந்து விடுவாய். நான் தாழ்ந்து விடுவேன். நீ உயிரோடு வாழ்வதுதான் நல்லது. உலகம் உன்னைக் கண்டு நகைக்க வேண்டும். பழித்துப் பழித்து உன்நெஞ்சைக் கலக்க வேண்டும். பித்தம் பிடித்து நீ அலைய வேண்டும் உன் உறுதி குலைந்து உலைய வேண்டும். நான் இன்னது செய்ய வேண்டும் என்பது எனக்கே தெரியவில்லை.

**கைகேயி:** அதுதான் உன் தந்தை சொல்லிப் போய்விட்டாரே. பரதன் நாடாள வேண்டும். இதுதான் அவர் வாய்மை தவறாத ஆணை.

**பரதன்:** ஐயோ கொடுமை! என்னை மறுபடியும் சிக்க வைக்கின்றாயே! அவருக்கு நாடாளும் உரிமை எனக்குக் கொடுக்க உரிமை இருக்கிறது. அதை ஏற்க வேண்டும் என்பது என்னைப் பொறுத்தது

தானே.

**கைகேயி:** இங்கே உன் விருப்பினால் நடக்க உனக்கு உரிமையில்லை. மன்னன் ஆணை; அந்த ஆணைக்குத் தான் இராமன் அடிபணிந்து காடு ஏகினான். அந்த ஆணைக்கு இணைந்துதான் நீ அரியணை ஏற்க வேண்டும்.

**பரதன்:** முடவனை மலைமேல் ஏறச் சொன்னால் அது முடியாத காரியம். என் தந்தை காட்டிய வழி எனக்கு இருக்கிறது. நீ கோழை என்று என்னைக் கூறுகிறாய். உன் சொல் என்னைப் படுகுழியில் தள்ளும். தள்ளுகிறது. என்பதை உணர்கிறேன். என் அண்ணன், அவனிடம் இந்த ஆட்சியை ஒப்புவித்து விட்டு,

**கைகேயி:** அதற்கு,

**பரதன்:** எனக்கு உரிமை இருக்கிறது. இந்த ஆட்சியை என் தந்தை எனக்குக் கொடுத்துவிட்டார். இதை நான் யாருக்கும் கொடுக்கக் கூடாது என்று அவர் சொல்லவில்லை. எனக்குக் கிடைத்த ஆட்சி இது, இதையாருக்கும் கொடுக்க எனக்கு உரிமை இருக்கிறது.

**கைகேயி:** கேகயன் மகள் இங்கேதான் தோற்று விட்டாள்; உணர்கிறேன். எவ்வளவு பெரிய தவறு செய்து விட்டேன் என்பதை உணர்கிறேன் உன்னை நம்பி என் உயர்ந்த வாழ்வை எல்லாம் இழந்தேன். கொடிய மனம் படைத்தவள் என்று பெயர் எடுத்தேன். இத்துணையும்,

**பரதன்:** வீண் முயற்சி. ஒன்று நீ செய்த பாவம் போக்க நான் தவம் மேற்கொள்ளப் போகிறேன். நீ தூயளாக விளங்க ஒரே வழி உள்ளது.

**கைகேயி:** தற்கொலை.

**பரதன்:** அது தான், நான் திரும்பி வருவதற்குள் நீ அதைச் செய்து முடித்தால்,

**கைகேயி:** தற்கொலை! தற்கொலை !!

**பரதன்:** ஆம் வருகிறேன். அதற்குள் செய்து முடி!

## காட்சி : 23

### கூனி, கைகேயி

**கூனி:** தற்கொலை! தற்கொலை!!

**கைகேயி:** எது?

**கூனி:** நம்மை நாமே கொலை செய்வது.

**கைகேயி:** மகனைப்பெற்று அவன் மட்டும் வாழவேண்டும் என்று நினைப்பது. வரலாற்றை மாற்றிவிட்டான். நீ போட்ட கணக்கு அத்தனையும் மாற்றிவிட்டான். யாருக்காக இந்த வரம் கேட்கச் சொன்னாயோ அவனே இதை ஏற்றுக் கொள்ளவில்லை.

**கூனி:** மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கியது போல ஆகியது.

**கைகேயி:** மண் குதிரையும் கரைகிறது; நாம் அடித்துச் செல்லப்படுகிறோம். அவன் என்னையே கொல்லத் துணிந்து நின்றான்.

**கூனி:** அட பாவி!

**கைகேயி:** அதைச் செய்ய முடியவில்லையே என்பதற்குத்தான் வருந்துகிறேன். அப்பொழுதே தசரதனும் அதைச் செய்ய மறந்துவிட்டான். சாகின்றவனுக்கு இந்தத் துணிச்சல் வந்திருக்கக் கூடாதா? நான் கொடிய

வள் என்பதைத் தெரிந்தும் என்னைக் கொல்லாமல் விட்டுவிட்டான். இதுதான் கொடுமை. இராமனாவது அவன் தன் வீரத்தை என்னிடம் காட்டியிருக்கக் கூடாதா? இலக்கு வனாவது தன் சீற்றத்தைப் பயன்படுத்தியிருக்கக் கூடாதா? அறம் அறம் என்று சொல்லி எல்லாரும் அடங்கிவிட்டார்கள். என் மகனாவது என்னைக் கொன்று உயர்புகழ் அடையக் கூடாதா? எல்லோரும் கோழைகளாகி விட்டார்களே என்று நினைக்கும்பொழுது, அதுதான் எனக்கு வேதனை யாக இருக்கிறது. என்னை நானே கொல்ல வேண் டுமாம். தற்கொலை செய்து கொள்ள வேண்டுமாம். எவ்வளவு கோழைத்தனம்; என்னைக் கொல்லத் துணிவு இல்லாத ஒரு கோழை பழிவருமே என்று அஞ்சி என்னையே நான் கொன்று கொள்ள வேண்டுமாம்.

**கூனி:** எதற்காக நான் வாழ்வது என்று எனக்கே தெரிய வில்லை. உன் ஒருத்திக்காகத்தான் நான் வாழ்கின் றேன், முன் என் கூனைக்கண்டு எள்ளியவர்கள் என் கொடுமனத்தைக் கண்டு அஞ்சுகிறார்கள். என்னை யும் தொடுவதற்கு அஞ்சுகிறார்கள். நானும் யாரா வது என்னைக் கொல்லுவார்களா என்று ஆசைப் படுகிறேன். யாரும் அதைச் செய்ய அஞ்சுகிறார் கள். கூனிகூனி என்று சொல்லுகிறார்களே தவிர யாரும் என்னை ஒழிக்கத் தயங்குகிறார்கள்.

**கைகேயி:** அப்பொழுது நான்தான் உன்னைக் கொலை செய்ய வேண்டும். நீதான் என்னைக் கொலை செய்ய வேண்டும். அந்தத் துணிவு உனக்கும் எனக்கும்தான் இருக்கிறது.

**கூனி:** வேறு வழி இல்லை. என்னை நீ கொன்று விடு; எனக்கு விடுதலை கிடைக்கும்.

**கைகேயி:** பிறகு நான் மட்டும் இந்த உலகத்தில் தனித்து வாழ்வதா! எனக்கு விடுதலை.

**கூனி:** அது நம் இருவருக்கும் இல்லை. இந்த உலகை அழிக்கப் பிறந்த நாம், கடைசிவரை அழித்து முடிக்க வேண்டியதுதான்.

**கைகேயி:** இந்த ஏமாற்றம் எனக்கு உண்டாகும் என்று எதிர்பார்க்கவே இல்லை. ஒரு நாளாவது என் மகன் அரியணையில் அமர்ந்தால் என் மனம் சாந்தி பெறும்.

**கூனி:** உட்காராமல் என்ன செய்ய முடியும். பரதன் உணர்வு நிறைந்தவன். அழுவான்; விம்முவான். பிறகு என்ன செய்யமுடியும்? இராமனைத் திரும்பி வரும்படி அழைப்பான். அவன் தந்தையின் இறுதிக்கே அஞ்சவில்லை; இவன் கெஞ்சலுக்கா அசைவான். எப்படியும் பதினான்காண்டுகள் கழிந்தன்றித் திரும்பி மீளான். அதுவரை இவன் ஆண்டுதான் தீர வேண்டும், வேறு வழியே இல்லை.

**கைகேயி:** அதுவும் பார்த்துவிட்டால் போகிறது. பொறுத்திருந்து பார்ப்போம். இப்பொழுதுதான் நீ என் சிறந்த தோழி என்பதை உணர்கிறேன்.

**கூனி:** எப்படியும் உன் மகன்தான் இந்த நாட்டை ஆளப் போகிறான். இஃது உறுதி. கேகயன் மகளுக்குத்தான் வெற்றி.

**கைகேயி:** கேகயன் மகள் வென்றால் அது போதும். அவன் அழட்டும்; கத்தட்டும்; விம்மட்டும்; எப்படியும் அவன் ஆண்டால் போதும்.

**கூனி:** இராமனைச் சந்திக்கக் காட்டுக்குப் போவான். திரும்பி வரத்தான் போகிறான்.

கைகேயி: தற்கொலை முடிவு.

கூனி: தேவையில்லை. இந்த உலகத்தை அழிக்கப் பிறந்த நாம்

கைகேயி: ஆக்கப் பிறக்கவில்லை. கேகயன் மகள் உறுதி குலைய மாட்டாள்.

## காட்சி : 24

### பரதன், கோசலை, வசிட்டர்

பரதன்: தாயே என்னை மன்னிக்க வேண்டும்.

கோசலை: எதற்கு?

பரதன்: என் அன்னை வயிற்றில் பிறந்தமைக்கு.

கோசலை: கேகயன் மகள் இழைத்த வஞ்சகம் உனக்குத் தெரிந்ததுதானே.

பரதன்: தெரிந்துதான் வருந்துகிறேன். நான் பிறந்த தால்தான் இராமன் துறந்தான்; மன்னன் மறைந்தான். இந்தப் பழிக்கு நான், ஆளாகி நிற்கின்றேன். வழிக்கு ஏதாவது வந்துதான் ஆகவேண்டும்.

கோசலை: மன்னனை இழந்த நாங்கள் மக்களையும் அனுப்பி அழிகின்றோம்.

பரதன்: இனி நானும் போக விடை கேட்க வந்துள்ளேன்.

கோசலை: மன்னர்மன்னன் நீ. மணிமகுடம் சூட வேண்டும். இந்தக் கவலையெல்லாம் மறக்க நீ, மணிமகுடம் சூட வேண்டும். இது மன்னனின் ஆணை.

பரதன்: ஆணை அதுவாயின் அதை மாற்றும் உரிமையும் என்னிடம் உள்ளது.கொடுத்த

தைப் பெற்று யாருக்கும் கொடுக்க முடியும் அதைத் தடுக்க அவள் வரம் பெறவில்லையே.

கோசலை: நீ நாடாள்வதில் எங்களுக்கு எந்தக்குறையும் இல்லை. மறுப்பு இல்லை. உன்னைவிட உத்தமர்கள் உலகில் யாரும் இல்லை. தகுதியும் இல்லை. இதை உணர்ந்துதான்,

பரதன்: என் தாய் எனக்காக மன்றாடினாள்.

கோசலை: நன்றே செய்தாள். நீ நாடாளும் செய்தி கேட்டு என்னைவிட மகிழ்ச்சி அடைந்தவர் யாருமே இல்லை. இப்பொழுதும் சொல் கிறேன் நீதான் நாடாள வேண்டும்.

பரதன்: எல்லாரும் சேர்ந்து திட்டமிட்டுச் சதி செய் தீர்கள்.

கோசலை: விதி செய்தது. அதை யாரும் மாற்ற முடி யாது. மன்னன் மாளவும், இராமன் காடா ளவும், நீ.....

பரதன்: நாடாளவும். இது பழைய பாட்டு. இராம னைத் தவிர இந்த நாட்டை ஆளும் உரிமை யாருக்கும் இல்லை. அதை முடிக்கத்தான் வந்தேன்.

கோசலை: முதலில் மன்னனின் ஈமக்கடனை முடித்து.

பரதன்: அதை

கோசலை: உனக்கு உரிமை இல்லை. சத்துருக்கனனுக் குத்தான் உரிமை நல்கியுள்ளார்.

பரதன்: உரிமை இல்லைதான். அவர் கொலைக்குக் காரணமே நான்தானே! தன்னை நல்கித் தருமம் காத்த மன்னவன் தசரதன். அவர்

மகன் என்று சொல்வதற்கு எனக்கு என்ன தகுதியிருக்கிறது? என்னை நல்கித்தான் அவர் மகன் என்பதை நிதல நாட்ட வேண்டும்.

வசிட்டர்: (நுழைதல்)ஆழிசூழ் உலகெலாம் பரதனே யாளத் தாழ்இரு சடைகள் தாங்கித் தவமேற் கொண்டு பூழி வெங்கான நண்ணிப் புண்ணிய நதிகள் ஆடி ஏழிரண் டாண்டின் வா என்று ஏவினன் அரசன்; இதுதான் அரசன் தந்த வரம்.

பரதன்: அப்பொழுது

வசிட்டர்: அப்பொழுது; அவன் நிலையை எப்படி நாங்கள் சொல்லமுடியும். செப்பரும் குணத்திராமன் திருமுகச் செவ்வி.

பரதன்: செவ்வி வாடியதோ?

வசிட்டர்: அதுதான் இல்லை. பொதுவாக அப் பொழுது அலர்ந்த தாமரையைப் போல் எப்பொழுதும் இருக்கும். இப்பொழுது அத் தாமரையை வென்று விட்டதுபோல் முகம் மலர்ந்தான்.

பரதன்: மலர்ந்த முகத்தோடு அவன் வனம் ஏகினான். நான் தளர்ந்த நெஞ்சோடு இங்கே தவிக் கின்றேன். எத்தனை இன்னலுக்கு இடையே நான் நிற்கின்றேன். தாயுரையால் உதவிய தரணிதன்னைத் தீவினை என்ன நீத்துச் சிந்தனை முகத்தில் தேக்கி நிற்கின்றேன். அவன் ஆட்சியைப் பெற்றுத்தான் ஆக வேண்டும் அதனை அவனுக்கு ஒப்படைத் தால்தான் நான் மன அமைதி பெறமுடியும். கொடுத்த வரத்தை நான் ஏற்று நடத்தப்

போகிறேன். என் அன்னை செய்த பழி அகல நான்தான் புண்ணிய நதிகள் ஆட வேண்டும். ஏழிரண்டு ஆண்டு தவம் செய்யவேண்டும். இல்லாவிட்டால் பழி தீரவே தீராது. நான் ஒரு வன் காடு சென்று மூவரை வீடு திரும்பச் செய் கிறேன். இலக்குவன் செய்த பேறு நான் செய்ய வில்லையா! அவன் வில்லைச் சுமக்க நிற்கிறான். நான் பழியைச் சுமக்க இருக்கிறேன்.

வசிட்டர்: கேகயன் மகள் என்றே இந்த நாட்டில் உன் அன்னையை அனைவரும் பிரித்துப் பேசிவிட் டார்கள். அவள் சொந்தப்பெயரை மாற்றிக் கைகேயி என்றே கூறத் தொடங்கிவிட்டார்கள். கேகயன் மடந்தை என்ற பெயரை மன்னன் மறந்ததே இல்லை. அதே பெயரால்தான் அவளை விளித்தான். அந்த

பரதன்: உணர்வு அவளுக்குத் தலைக்கேறி விட்டது. அவள் சாகவில்லை. மற்றவர்களை அழிக்கத் தொடங்கி விட்டாள். தாய்க்குலமே இந்தத் தவற்றைத்தான் செய்கிறது; தான் பிறந்த அகம் செழிக்க வேண்டும் என்று நினைக்கிறது. தன் வயிற்றுமகன் வாழ வேண்டும் என்று நினைக்கிறாள்.

வசிட்டர்: பெண் உள்ளம் அதுதான். இந்த இரண்டு உணர்வுகள் சேர்ந்தவள்தான் ஒரு பெண். மண மாவதற்கு முன் தாயகம். ஆனபிறகும் அந்தப் பெருமை நிலைத்து நிற்கிறது. மக்கள் பிறந்தும் மக்கள் வாழ வேண்டும் என்ற காதல். இந்த இரண்டு உணர்வுகளும் ஒரு சேர நின்றுவிட்டன அவளுக்கு.

பரதன்: நீங்கள் எல்லாம் தடுத்து........

வசிட்டர்: அடுத்துக் கேட்டோம். கேட்கவில்லை. இப்

பொழுது அவள் நிலைக்கே நான் பரிதாபப் படு கிறேன். உலகம் அவர்களை விட்டு வெகுதூரம் பிரிந்து விட்டது. அவளும் கொடுமனக் கூனியும் இருவர்தான் இப்பொழுது உலகம்.

**பரதன்:** கூனி! அவளை விட்டு வைப்பது

**வசிட்டர்:** தவறு. அவர்கள் சாகத்துடிக்கிறார்கள். அதற்கு யாரும் துணை செய்ய விரும்பவில்லை. விடுதலை பெறத் தவிக்கிறார்கள். அவர்களாகச் சாக

**பரதன்:** அவர்கள் உறுதி கொண்ட நெஞ்சினர்.

**வசிட்டர்:** அதைக் கண்டுதான் வியக்கின்றேன். பெண் என் றால் அவள்தான் பெண் அவசரப்பட்டு அவளைக் கடிந்து இருக்கிறேன். எஃகு போன்ற நெஞ்சு உன் அன்னைக்குத்தான் உள்ளது. அவள் உத்தமி. ஓர் உயர்ந்த தியாகி. அதை இப்பொழுது உணர்கிறேன்.

**பரதன்:** உலகம் அவளை விடாது. பழி வாங்கித்தான் தீரும்.

**வசிட்டர்:** அதற்கு அவள் கவலைப்படமாட்டாள். தவசிகள், அறிஞர்கள், கொள்கைவீரர்கள் மற்றவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்று மதிப்பிட்டு வாழ்வதில்லை. உலகம்தான் அவளைப் புரிந்து கொள்ள வேண் டும். அவள் உலகத்தைப் புரிந்து கொள்ளவும் மாட் டாள். அது முடியவும் முடியாது.

**பரதன்:** எல்லாம்

**வசிட்டர்:** தலைகீழாகத் தோன்றும். இதுதான் உண்மை. இரா மனின் ஆணையும் நீ நாடாள வேண்டும் என்பதே. அதினின்று தப்ப முடியாது.

**பரதன்:** ஒருத்தியின் நெஞ்சு உரத்தால் எல்லாம் தலை கீழாக மாறி இருக்கிறது. நீங்களும் இப்பொழுது மாறி விட்டீர்கள். வசிட்டர் வாயால் அவளை

உத்தமி என்று சொல்வது வியப்பாக இருக்கிறது.

**வசிட்டர்:** குறை எங்கே தோன்றியது என்று சிந்தித்தாயா? அவள் கேகயன் மகள் என்பதை யார் நினைவுபடுத்தியது? இந்த வீட்டு மருமகள் ஆனதும் அவள் இன்னொருவீட்டு மகள் என்பதை மறுப்பதற்கு வேண்டிய சூழ்நிலையை உண்டாக்கியிருக்க வேண்டும்.

ஒவ்வொருவருக்கும் அவளைக் கேகயன் மகள் என்பதை யார் நினைவுபடுத்தியது? இந்த வீட்டு மருமகள் என்பதை அறிவதற்கு வேண்டிய சூழ்நிலையை உண்டாக்கியிருக்க வேண்டும்.

கேகயன் மானே என்றுதான் மன்னன் விளித்து வந்தான். இதை யாராவது மறக்க முடியுமா? இந்த நாட்டில் உள்ள ஒவ்வொருவருக்கும் அவளைக் கேகயன் மடந்தை என்றுதானே கிளத்தி வந்தனர். அவளோடு வந்த கூனி பொதிந்து இருந்த பஞ்சில் நெருப்பை வைத்தாள்; அது பற்றிக்கொண்டது. அவள் வெறும் கருவியே தவிர, அவள் காரியம் என்று கூற முடியாது.

**பரதன்:** கொடுமனக் கூனியும் ஒரு மனத்தாயும் ஒன்று சேர்ந்த சூழ்ச்சிப் புயல். இதில் எத்தனை பேர் சிக்கிவிட்டனர். சுற்றிச் சுற்றி வீசி எத்தனை பேரைப் பற்றியுள்ளது. ஆற்றல்மிக்க அறிவு அவர்கள் சிந்தனை. மன்னன், அமைச்சர், வசிட்டர், இராமன், இலக்குவன், இந்த நாடே அவர்கள் சுழற்சியில் தப்பமுடியவில்லை. என்னையும் இறுக்கி அழித்து அவர்கள் கற்பனைக்குக் கருவியாக்க நினைக்கிறார்கள். நான் எப்படியும் ஆட்சியில் அமர்வதாம். அது ஒன்று நடந்தால்

போதுமாம்.

வசிட்டர்: மன்னவன் ஆணை அது. மறுக்க முடியாதே.

பரதன்: முடியும். நான் போய் இராமனை எப்படியும் அழைத்து வந்து என் தந்தை செய்த கொடுமை யையும் தாய்செய்த சூழ்ச்சியையும் நிமிர்த்திச் செம்மைப்படுத்தப் போகிறேன். இதை யாரும் தடுக்க முடியாது. எதுவும் முடியவில்லை என்றால் இலக்குவன் பெற்ற பேற்றினையாவது நான் பெற வரம் வேண்டுவேன். இதோ புறப்பட்டுக் கொண்டே இருக்கிறேன்.

வசிட்டர்: நாடே உன் பின்னால் புறப்படும். இனி அயோத்தி காடு ஆகப்போகிறது. காடு அயோ த்தி ஆகப்போகிறது. வேறு வழி இல்லை.

பரதன்: இராமன் இருக்கும் இடம்தான் நான் இனி இருக்கும் இடம். நான் தனியே போகிறேன். யாரும் பின்பற்ற வேண்டாம்

வசிட்டர்: நீ இப்பொழுது மன்னர் மன்னன். இந்த நாட்டுச் சக்கரவர்த்தி. இது மன்னனின் ஆணை. இதை மறுக்க முடியாது. பரதன் போகிறான் என்றால் நாட்டு மன்னன் போகிறான் என்பது பொருள். சேனையும் யானையும் எல்லாம் உன் பின் தொடரும்; இதைத் தடுக்காதே.

பரதன்: அத்தனையும் இராமன் திரும்பி வரும்பொழுது அவனுக்குத் தேவைதான். தாழிரு சடைகள் தாங் கித் தவம் மேற்கொள்ளும் எனக்கு இவை தேவை இல்லை. மன்னர் மன்னன் இராமன் திரும்பி வரும்பொழுது அவனுக்குப் பயன்படட்டும். வந்து போகட்டும் நான் மட்டும் தவத்தின் கோலம் ஏற்பேன். மணிமுடிக்கோலமே எனக்கு வேண்

டாம். புறப்படுகிறேன்.

**வசிட்டர்:** கேகயன் மகளும் கூனியும் தவிர மற்று எல் லாரும் உன்னோடு வருவார்கள்.

**பரதன்:** எப்படியாவது ஆகட்டும். அவர்கள் இருவரும் வராமல் இருந்தால் போதும்.

## காட்சி : 25

**கூனி, கைகேயி**

**கூனி:** அம்மா! அம்மா!

**கைகேயி:** என்ன புதிய செய்தி?

**கூனி:** இந்த அரண்மனையில் நம் இருவரைத்தவிர வேறு யாருமே இல்லை.

**கைகேயி:** பேய்கள் இப்படித்தான் நடமாடும் என்பார்கள். நாம் இருவர்தாம் இருக்கிறோம் என்றால் உண்மையில் அச்சமாகத்தான் இருக்கிறது. இரு வராவது இருக்கிறோம். ஒருவர் மட்டும் இருந் தால்.

**கூனி:** பேய்கூடக் கூட்டமாகத்தான் சுற்றும் என்பார் கள்.

**கைகேயி:** பேயினும் பெரும் பேய்கள் நாம். எவ்வளவு பெரிய வீழ்ச்சி. மன்னனின் மனைவியாக இருக்க வேண்டிய நான்.

**கூனி:** கேகயன் மகளாக நின்று விட்டாய்.

**கைகேயி:** அதிலாவது வெற்றி பெறுவேனா? அவன் ஒருக்கால் இராமனை

**கூனி:** அழைத்து வந்துவிட்டால்

**கைகேயி:** வரமுடியாது. இராமன் திரும்பி வரமாட்டான். அதில் மட்டும் எனக்கு நம்பிக்கை இருக்கிறது.

**கூனி:** பரதன் அங்கேயே தங்கிவிட்டால்?

**கைகேயி:** பதவி அவனை விட்டு விலகாது. விலக்க அவனுக்கு ஆற்றல் இல்லை. அவன் பதவி ஏற்க மறுக்கவில்லை. உலகின் பழிக்குத்தான் அஞ்சுகிறான். இராமனின் நல்லெண்ணத்தையும் பெற முயல்கிறான். அவன்தான் பரதன்; உணர்ச்சியின் பிழம்பு அவன். அவன் நல்லவன் என்ற பெயர் எடுத்தால்தான் ஆட்சியை நடத்த முடியும். வெறும் ஆணையால் பதவிக்கு வந்தால் அவனால் ஆட்சி செய்வது அருமை வெறும் முடியாட்சியாக இருக்கும். குடிபோற்றும் ஆட்சியாக இருக்க முடியாது. மக்கள் உடனே அவன் ஆட்சியை ஏற்றால் எதிர்ப்புக்கிளப்புவர். அதனால் அவன் செய்வது நல்லதுதான். அவனுக்குத்தான் வெற்றி கிடைக்கும்.

**கூனி:** உன் பார்வையே புதிதாக இருக்கிறது. குருவுக்கு மிஞ்சிய மாணவியாக இருக்கிறாய். நானும் அதைத்தான் எதிர்பார்க்கிறேன். பரதனை விட உத்தமன் இல்லை என்று பெயர் பெறுவதற்கு நல்ல வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. உன்னுடைய கொடுமையால்தான் அவனுக்கு உயர்வு கிடைத்திருக்கிறது! பரதன் எவ்வளவு உத்தமன்! அவன் தாய் எவ்வளவு கொடியவள் என்று உலகம் பேசும்.

**கைகேயி:** தாயுரை கேட்டுத் தந்தை உதவிய தரணியை நீத்த உத்தமன் என்ற புகழை நிலைநாட்டப் போகிறான். ஆயிரம் இராமர் அவனுக்கு நிகராக

மாட்டார் என்று புகழப்படப்போகிறான். இப்பொழுதே கோசலை அவனை வாழ்த்திவிட்டாள். மன்னர் மன்னன் நீ என்று அவனை வாழ்த்திவிட்டாள். வசிட்டரும், நீ பட்டம் ஏற்றுத்தான் தீர வேண்டும். என்று சட்டத்தை எடுத்துக்காட்டி இருக்கிறார். நாடு மட்டும் அல்ல காடு கூட அவன் புகழைப் பேசப் போகிறது.

**கூனி:** குகன் எவ்வளவு வேகமாக எதிர்த்தானோ அவ்வளவு வேகமாக அடங்கிவிட்டானாம். வற்கலையின் உடையானை மாசடைந்த மெய்யானை நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானைக் கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்; விற்கையின்று இடைவீழ விம்முற்று நின்றொழிந்தான் என்று அவர்கள் சந்திப்பைப் பற்றி செய்தி கிடைத்தது. மேலும் எம்பிரான் பின் பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு. என்று பேசிக் கொண்டானாம். வேடுவன் குகன், நாவாய்த்தலைவன் அவனே நா வாய் குளிர வாழ்த்துகின்றான் என்றால், பரதனின் புகழை இனி இந்த நானிலம் பேசாமல் இருக்குமா.

**கைகேயி:** அதைத்தான் நான் எதிர்பார்த்து நின்றேன். எங்கே இவன் உடனே ஆட்சியைப்பற்றி என்னைப் போன்று உலகின் நிந்தனைக்கு ஆளாகிச் சிந்தனை இழக்கின்றானோ என்று பார்த்தேன். புத்திசாலி; உணர்ச்சி மிக்கவன். உயர்ந்த எண்ணங்கள் கொண்டவன். உடன் பிறந்தவரைப் பகைக்காத செம்மல். பரதன் ஆளவேண்டும் இந்த நாடு பரத கண்டம் என்ற புகழ் நிலைநாட்ட வேண்டும். கேகயன் மகளால்தான் இந்த நாடு பரத கண்டம் என்ற பெயர் அழியாமல் பாதுகாத்ததாக இருக்க வேண்டும். வரலாற்றில்

அழியாப் பெயர் இவன் பெறவேண்டும். என் மகன் உலகம் போற்றும் உத்தமன் என்ற பெயர் பெற்றால் போதும்.

**கூனி:** உன் வாழ்வு.

**கைகேயி:** கருகித்தான் போகும். கனி செழிக்கும். புதிய குலை ஈன்றதும் பழைய வாழைச்செடி அழிந்து போகும் அடியோடு முரிந்தும் போகலாம். அழுகலைப் பெறும். இஃது இயற்கையின் நியதி. அந்த அழுகல் மரம் தான் புதிய மரம் விளை வதற்கு உரமாக அமைகிறது. தசரதன் இறக்க வில்லை என்றால் பரதன் புகழை இந்த மாநிலம் உணர்ந்திருக்க முடியுமா? இராமன் காட்டுக்குச் சென்றதால்தான் அவனும் புகழ் அடைந்தான். சீதையின் வாழ்வும் அங்கேதான் மலரப்போகிறது. அரசரில் பிறந்து அரசரில் வளர்ந்து அரசியாகிவிட்டால் அதில் என்ன புதுமை இருக்கிறது.?அவள் ஒரு காவியத்தின் தலைவியாகப் போகிறாள். அந்தத் தலைமைப் பதவியைக் கொடுத்தது யார்? கேகயன் மகள்தான். அதை இந்த உலகம் உணராது. உணர்வதற்கு இப்பொழுது காலம் இல்லை. அத் தகைய உணர்வும் எனக்குத் தேவை இல்லை. என் னுடைய அழுகலில்தான் புதிய வாழை செழிக் கும். செழிக்கட்டுமே அதைக் கண்டு என் மனம் ஆறுதல் அடையும்.

**கூனி:** குகன் பரதனைப் பார்த்து இவ்வாறு கூறினா னாம்.

**"தாயுரைகொண்டு தாதை உதவிய தரணி தன்னைத்**
**தீவினை என்ன நீத்துச் சிந்தனை முகத்திலே தேக்கிப்**
**போயினை என்ற போழ்து புகழினோய் தன்மை கண்டால்**
**ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியில் அம்மா!.**

என்று பாராட்டிப் பேசினானாம்.

பரதன் ஆயிரம் இராமரைப் புகழில் வென்று விட்டான்.

**கைகேயி:** பழி துடைத்து வாழ்ந்தான்; அவன் புகழ் அழியாது. பலரைத் தியாக வாழ்வில் புகுத்தியது இந்தக் கேகயன் மகள்தான்; அவரவர் உயர்ந்த பண்புகளை வெளிப்படுத்த வாய்ப்புக் கொடுத்தது இந்தக் கேகயன் மகள்தான், இராமனைக் காவியத் தலைவன் ஆக்கியதும் நான்தான். பல புதிய அனுபவங்களை உண்டாக்கித் தந்தவள் நான்தான். தசரதன் பல மகளிரை மணந்து ஒழுக்கத்தில் உயர முடியாமல் போய்விட்டான். இராமன் ஒருத்தியோடு வாழ வாய்ப்பு உண்டாக்கியது நான்தான். அவனும் பட்டம் சூடி இருந்தால் இட்ட மகிஷிகள் எத்துணை பேர் அவனைச் சூழ்ந்து இருப்பார்களோ! சீதையின் அன்பு வாழ்க்கையை அவன் உணர்ந்து உயர்ந்த தலைவனாக வளர்வதற்கு வேண்டிய வாய்ப்பு அளித்தவள் நான்தான். எதற்கு எடுத்தாலும் சீற்றம் கொண்டு சினத்தவனாக விளங்கும் இலக்குவன் அடக்கம் என்பதை அறிந்து பயில்வதற்கு இதைவிட நல்ல வாய்ப்பு எப்படிக் கிடைத்திருக்கும்.?

**கூனி:** எப்படியோ நம் திட்டம் நிறேவேறுகிறது. எல்லாம் இராமனைச் சந்தித்த பிறகுதான் முடிவு தெரியும். பரதன் அங்கேயே தங்கி விடுவானோ? மீண்டும் நாட்டை ஆளத் திரும்புவானோ? போகப் போகத்தான் தெரியும்

**கைகேயி:** எப்படியும் இராமன் திரும்பி இப்பொழுது வர மாட்டான் பதினான்கு ஆண்டுகள் கழித்துதான் திரும்புவான். அதற்குள் என் மகனுக்கு நல்ல

வாய்ப்புக் கிடைக்க இருக்கிறது. ஆட்சியில் நீதியும் நிம்மதியும் நிலைக்கச் செய்வான். பரதனின் ஆட்சியைவிட இராமன் சிறப்பாக ஆண்டிருக்க முடியாது என்பதை உணர்வார்கள். இராமன் தசரதனால் உண்டாக்கப்பட்ட தலைவன். தசரதன் மகன் என்பதால் அவனுக்குப் பெருமை. அதே மோகத்தால் அவனை வழிபடத் தொடங்கினார்கள். அங்கே தனி மகனுக்குப் பெருமை. என்மகன், அவன் ஆட்சியின் சிறப்பால் ஒப்பற்ற பெருமை அடையப் போகிறான். ஆணவமற்ற நிலையில் நின்று அவன் ஆட்சி செய்யப் போகிறான். பழி என்றால் என்ன என்பதை என் வாழ்வால் அவன் படிப்பினையைக் கற்றுக் கொண்டான். பழியால் இழிவு வராத ஆட்சியை அவன் படைத்துக் காட்ட முடியும்.

**கூனி:** அப்பொழுதுதான் கேகயன் மகளின் உயர்வை இந்த மாநிலம் உணரப்போகிறது.

**கைகேயி:** மக்கள் பெருமையால்தான் பெற்றோர்க்குப் பெருமை உண்டாகிறது. என் வாழ்வு உண்மையில் நிறைவு பெறுகிறது. நான் தாய் என்பதன் பயனை அடைவேன். ஈன்ற பொழுதிற் பெரிது உவக்கும். அதுவே தாய்மையின் வெற்றி. என் மகன் சான்றோன் என நானிலமே நவில்கிறது. இதுதான் வெற்றி. அவன் ஆட்சியை இருந்து காணும் பேறுதான் நான் செய்த தவத்தின் பேறு.

**கூனி:** இப்பொழுது நம் நிலை.

**கைகேயி:** தனிமை தான். இதுதான் தவம்.

## காட்சி : 26

### பரதன், இராமன்

**பரதன்:** ஐய! நின்னைப் பிரிந்த பிரிவு என்னும் பிணியாலும் என்னைப் பெற்றவள் பெற்ற வரம் என்னும் காலனாலும் தன் மெய்யை நிறுவ மெய்யை விட்டுச் சென்றார் நம் தந்தை.

**இராமன்:** விண்ணிடை அடைந்தான் என்ற புகழ்ச் சொல் புண்ணிடை வேல் என என் உள்ளத்தில் பாய்கிறது. நந்தா விளக்கனைய நாயகன் நந்தி விட்டான். நானிலத்தோர் தந்தை அவன். தனி அறத்தின் தாய். அவன் இறந்தான் என்றால் அந்தோ இனி வாய்மைக்கு யார் இருக்கிறார்கள்.

வரதன் துஞ்சினான்; ஐயன் ஆணையால் வையம் நின்னதே: மகுடம் தாங்காமல் விரதவேடம் நீ பூண்டது ஏன்? பரதனே நீ விரதன் ஆனது ஏன்? சொல். எனக்கு ஒன்றும் புரியவில்லை.

**பரதன்:** நீ அன்றி யாவர் அறத்தின் காவலராக நிலை பெறமுடியும். அறம் எது? நீதான் சொல்ல வேண்டும். மனத்துக்குப் பொருந்தாத வரங்களால் உன்னையும் பொருந்தாத நிலையில் நிறுவி,மன்னனைக் கொன்றவள் தனயன் நான். இந்தப் பழி எல்லாம் நீங்க ஒரே வழிதான் உள்ளது. தவம் செய்தால் அல்லது இந்த அவம் என்னை விட்டு நீங்காது; இவ்வுலகை நோய் செய்த கொடியவளுக்குப் பிறந்த பாவியேன் சாவது ஓர்கிலேன். தவம் செய்யும் வழி அறியாதவனாக இருக்கின்றேன். இப்பழியினின்று எப்படி நான் எழுவது? இரண்டில் ஒரு வழியை நீ சொல்லித்தான் ஆகவேண்டும். நிறையில் நீங்கியமகளிர் நீர்மை

யும், பொறையில் நீங்கிய தவமும், அருள் துறையின் நீங்கிய அறமும் முறையின் நீங்கிய அரசைவிடக் கொடுமையாகுமோ? மூத்தவன் முறைமையால் ஆளவேண்டிய ஆட்சியை உன் னைத் தவம் செய்யும்படி விட்டுவிட்டு இளைய வன் நான் ஆட்சி செய்வதா?அஃது அறத்தைக் கொல்வது என்று கூறுதைத் தவிர வேறு என்ன என்று கூறமுடியும்? உன்னைப் பிரிந்த சோகத் தால் மன்னன் உயிர்விடவும், புகையும் வனத் தில் நீ புகவும், புத்திசாலியாக நான் மட்டும் வஞ் சனையோடு அரசு வவ்வ நான் உனக்குப்பகை வனா? தந்தை செய்த தீமையும் உலகு பொறுக் காத நோய்தந்த தீவினையைத் தந்த தாய் செய்த தீமையும் நீங்க மீண்டும் நீ. அரசு செய்ய வேண் டும். இதுதான் என் சிந்தையும் சிந்தனையும்

**இராமன்:** தந்தையும் தாயும் நம் கண்கண்ட தெய்வங்கள். தாய் வரம் கொள்ளத் தந்தை ஏவலால் மேய நம் குலத்தருமத்தை மேவினேன்; அவர்கள் அறிவித்த அரிய நெறியை நீ வேண்டுவதால் விட்டுக் கொடுப்பது நீர்மையாகுமோ

தனயர் ஆயினார் தந்தை தாயரைத் தட்டி நடப்பது வன்பழியை உண்டாக்காதா? அவர்கள் சொற்களைத் தட்டி அதனால் வாய்மையைப் பொய்ப்பித்து, அவர்களை நரகுக்கு அனுப்பி வைத்து, நன்னிதிக்குவையில் வைகி வாழ்ந்து, செம் மைசேர் நிலத்து அரசு செய்வேனோ? வரத்திலே தரணி உன்னது என்று அமைந்து விட்டது. அதனை ஆளும் உரனும் உன்பால் உள்ளது. ஆதலால் அரசு உன்னதே; ஆள்க நீ.

**பரதன்:** நீ பிறந்த பார் என்னது ஆகில் யான் இன்று உனக்குத் தந்து விட்டேன்; மன்னன் நீ! புறப்

படு, மகுடம் சூடு. மலங்கி வையகம் கலங்கி வைக நீ விரும்பியதைச் செய்து இங்கே இருப் பாயோ? உலகம் கலங்காமல் இருக்க நீ புறப் படு; நாடு திரும்பு.

**இராமன்:** நீ ஆட்சியைக் கொடுக்கின்றாய், சரி. அன்று அவர் குறித்த பதினான்கு ஆண்டுகளும் இன் றோடு முடிந்துவிடுமா? வாய்மை என்னும் ஈது அன்றி வையகம் தூய்மை வேறு உளது என்று கூறுமோ? தீமை என்பது வாய்மையினின்று நீங்குவது அன்றி வேறு எது?

எந்தை ஏவ ஆண்டு ஏழொடு ஏழும் நான் வனத்துள் வைக எனக்கு நீ தந்த பாரினை உனக்குத் தருகிறேன். இந்தப் பதினான்கு ஆண்டுகள் நீ இதனை ஆள வேண்டும் இஃது என் ஆணை.

மன்னவன் இருக்கவும் மணி அணி மகுடம் சூடுக என்று அவர் கூற யான் ஒப்புக்கொண் டது அவர் ஏவியது மறுக்க அஞ்சி. அதே போலத்தான் நீயும் நான் இருந்தாலும் என் ஆணையை நினைத்து ஆட்சி ஏற்று நடத்து. என் ஆணையை நீ மறுக்க முடியுமா? ஐய, துயர் உழந்து அயராதே.

**பரதன்:** இதற்குமேல் என்னால் என்ன செய்வது என்று தெரியவில்லை. பதினான்கு ஆண்டுகள் கழிந்ததும் ஒரு நாள் கூடத் தங்கேன் இந்த ஆட்சியில்; வருகிறேன்.

## காட்சி : 27

**கூனி, கைகேயி**

**கூனி:** எப்படியும் ஆட்சியைப் பரதன்தான் மேற் கொள்ளப் போகிறான், ஆனால் பதினான்கு ஆண்டுகள்தானே.

**கைகேயி:** அவ்வளவுதானே நானும் கேட்டது. அதற்கு மேல் தேவையில்லை. தசரதனைப் போல, பல ஆண்டு கள் ஆன்டு சுமையாக இருக்கத் தேவையில்லை. கைகேயி வென்றாள்; அது போதும். உன் மகனுக் குத்தான் ஆட்சி என்று சொல்லித்தான் என்னைத் திருமணம் செய்துகொண்டார். பிறகு மன்னன் தான் சொன்ன வாக்கை மழுப்பி மாற்ற நினைத்தார். அதை வளர்ப்புமகன் ஆள்வதும் நான் விரும்பு வதுதான். இவன் பதினான்கு ஆண்டுகள் ஆளட் டும். பிறகு அவன் பதினான்கு ஆண்டுகள் சரிசம மாக ஆளும் உரிமை பெற வேண்டும் என்பதுதான் என் வரத்தின் அடிப்படை

**கூனி:** நந்தியம் கிராமத்தில் தங்கிவிட்டானே; அயோத் திக்குத் திரும்பவில்லையே.

**கைகேயி:** அவன் எங்கிருந்தாலும் என்ன? இருந்து ஆள வேண்டும். அயோத்தி நகரத்தின் ஆரவாரத்தில் அவன் மங்கிப் போகக் கூடாது. அமைதியான இடத்தில் இருந்து நீதியை நிலைநாட்ட வேண்டும். இங்கே அவனுக்கு எப்படி அமைதி கிடைக்கும்? மக்கள் அவனைப் பழித்துக் கொண்டே இருப்பார்கள். அதுவும் நல்லதுதான். எனக்கும் அமைதி கிடைக்கும்.

**கூனி:** உலகம் உன்னைப் பற்றி எப்பொழுதும் பழித் துக்கொண்டே இருக்கும்.

**கைகேயி:** என் மகனைப் புகழ்ந்து கொண்டே இருக்கும். அது போதும். உலகம் என்ன சொல்லும். கேகயன் மகள் என்று முன்னம் சொன்னது. இப்பொழுதும் அதைத்தான் சொல்லும்.

**கூனி:** கேகயன் மகள் உறுதி கொண்ட நெஞ்சினள் என்று சொல்லும், உன் மகன்...

**கைகேயி:** தசரதன் மகன் என்பதை நிறுவி விட்டான், வரத்தால் பெற்ற அரசைத் தன் திறத்தால் நிறுவி விட்டான். முறைப்படி இராமனுக்குப் பின் தான் ஆட்சி அவனுக்கு வரவேண்டும். அதுதான் இந்த நாட்டுச் சட்டம். மன்னவன் சொன்னாலும் மரபு அதற்கு இடம் கொடுக்காது. என் மகனும் மரபையும் தன் பக்கம் இழுத்துக் கொண்டான். இராமனிடம் கொடுத்துவிட்டு மீண்டும் முறைப்படி அவனிடமிருந்து பெற்றுக் கொண்டான்.

**கூனி:** அப்பொழுது உன் மகன்.

**கைகேயி:** என்னைவிடப் புத்திசாலி. சட்ட நுணுக்கம் அறிந்தவன். அதனையும் அவன் தன் பக்கம் இழுத்துக் கொண்டான். கேகயன் மகள் பெறாத வெற்றியை அவன் பெற்று விட்டான்.

**கூனி:** இனி

**கைகேயி:** நான் தசரதனின் மனைவி, விதவைக்கோலம் நான் விரும்பி ஏற்ற கோலம். அந்தக் கோலத்தில் தசரதனின் நினைவோடு என் வாழ்நாள் முழுவதும் கழிப்பேன். கேகயன் மகள் அல்லள் இவள். இவள் தசரதனின் மனைவி. தசரதனின் மகன்தான் இப்பொழுது ஆட்சி செய்கிறான், அவன் மகன் தான் இனியும் ஆட்சி செய்யப் போகிறான்.

********